# இந்திய கப்பற்படை எழுச்சி

## பெருமிதமும் சோகமும்

An Account of Royal Indian Navy Upraisings 1946



ஆர்.பட்டாபிராமன்

**மின்னூல் வெளியீடு : http://FreeTamilEbooks.com**



பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/an$_{a}$ccount$_{o}$f$_{r}$oyal$_{i}$ndian$_{n}$avy$_{u}$praisings$_{1}$*946*

அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம் - ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam*09*@gmail.com

**கணியம் அறக்கட்டளை**

(Kaniyam.com/foundation)

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

பதிவிறக்கம் செய்ய - http://freetamilebooks.com/ebooks/an$_a$ccount$_o$f$_r$oyal$_i$ndia n$_n$avy$_u$praisings$_1$946

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# முன்னீடு

வரலாறு பல தரப்புகளையும் திறப்புகளையும் கொண்டதாகவே இருக்கிறது. வரலாற்றை ஒரு பக்கமாகவே தெரிந்துகொண்டு அது மட்டுமே மிகச்சரி எனப் பழக்கமாக்கிக் கொண்ட ஆண்டுகள் பல என் வாழ்வில் கடந்து போயுள்ளன. வரலாற்றின் ஒவ்வொரு புள்ளிக்கும் பல பக்கங்கள்- பன்முக விவாதங்கள் இருக்கின்றன- ஏன் நிகழ்கால event ஒவ்வொன்றிற்கும் கூட பலமுனை வாதங்கள் புழக்கத்தில் இருக்கின்றன என்பதை புரிந்துகொள்ளத் துவங்கியதும் என்னிடம் இதுவே மிகச்சரி- இதற்கு இதுதான் இறுதி வாக்கியம் என்கிற absoulteness மெதுவாக கழன்று போகத்துவங்கியது.

வரலாற்றின் ஒரு புள்ளியை தெரிந்துகொள்ள ஆரம்பிக்கும்போது முடிந்தவரை - என் தேடல் எல்லைவரை கிடைப்பனவற்றை அவரவர் மொழியில் பதிவிட வேண்டும் என்ற உணர்வு என்னிடம் வேர்கொள்ளத்துவங்கியது. என் எழுத்துக்களை இந்த வகையில் அமைத்துக்கொள்ளத்துவங்கினேன். அப்படி ஒரு முயற்சியாக இந்த சிறிய ஆக்கத்தையும் எடுத்துக்கொள்ளலாம்.

1946 பிப்ரவரியில் நடந்த ‘கப்பற்படை புரட்சியை’ எழுச்சி என்றும், கலகம் என்றும், வேலைநிறுத்தம் என்றும் பலவகை மதிப்பீடுகள் செய்யப்பட்டுள்ளன. அதை அவ்வாறு அழைத்தல் கூடாது -ஒழுங்கீனம் அவ்வளவே, வீரர்கள் என கதாநாயகத்தன்மை ஏற்றுவது ஆபத்தானது என ஆளும் பிரிட்டிஷ் மதிப்பிட்டதும் நடந்தேறியது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு இறுதி ஆணி அறைந்த போராட்டம் என்றும், விடுதலைப் போராட்டத்தின் மிக முக்கிய அத்தியாயம் என்கிற மதிப்பிடும் இருக்கிறது. இந்தியாவில் புரட்சிகர சூழல் உருவாக்கத்திற்கு முக்கிய பங்காற்றிய போராட்டம் என்கிற மதிப்பீட்டையும் பார்க்கிறோம்.

போராட்டத்தில் பங்கேற்றவர்கள் பலர் மிக இளைய வயதினர். அவர்கள் தங்கள் அனுபவங்களை- போராட்டத்திற்கு பின்னரான அவலங்களை சொல்லியுள்ளனர். அவை பெருமிதமும் சோகமுமான பதிவுகளாக

இருப்பதை உணரமுடிந்தது.

அரசியல் கட்சிகளாக காங்கிரஸ், முஸ்லீம்லீக், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி போராட்டக்களத்தில் எப்படி நின்றனர்- போராட்டத்தை எப்படி அணுகினர் என்கிற பதிவுகள் ஏராளம் கிடைக்கின்றன. முக்கிய தலைவர்கள் என்ன பேசினர்- வாக்குறுதிகளாக எவற்றை தந்தனர் என்பதைக் காண்கிறோம். காந்தி, நேரு, ஜின்னா, படேல், ஆசாத், அருணா ஆசப் , லியாகத் அலி எனப் பலரும் இப்போராட்டம் பற்றி கருத்து தெரிவித்துள்ளனர். மதராஸ் மாகாணத்தில் காமராஜர், ஜீவா, பாலதண்டாயுதம், எம் ஆர் வெங்கட்ராமன் போன்றோர் போராட்டம் குறித்து பேசியுள்ளனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் 1947ல் போராளிகளிடமிருந்து பெறப்பட்ட பல செய்திகளை தொகுத்து ஆவணப்படுத்தியுள்ளனர். அதை 1954ல் தான் அவர்களால் கொணரமுடிந்தது. இதில் இ எம் எஸ் தன் கருத்தை முன்னுரையில் எழுதியுள்ளார். CPI சார்பில் தோழர் பி சி ஜோஷி கடிதத்துடன் ரின் விசாரணைக்குழுவிற்கு மெமோரண்டம் அனுப்பியுள்ளனர். அதில் போராட்டத்தை தாங்கள் தூண்டவில்லை ஆனால் முழுமையாக ஆதரித்து நின்றோம் என தெளிவாக அறிவித்துள்ளதைக் காண்கிறோம்.

பிரிட்டிஷ் நாடாளுமன்றமும், இந்தியாவில் மத்திய சட்டமன்றமும் இந்தப் பிரச்னையை எப்படி விவாதித்துக்கொண்டன என்பதை அறியமுடிகிறது. ஆசப் அலி, எம் ஆர் மசானி, லியாகத் அலி, அனந்தசயன அய்யங்கார், ரங்கா போன்றவர்களின் வாதங்கள் தீவிரமாக இருந்ததைக் காண்கிறோம். டாக்டர் அம்பேத்கர் அப்போது வைஸ்ராய் கவுன்சில் லேபர் துறை பொறுப்பில் இருந்தார். மத்திய சட்டமன்ற விவாதங்களில் அவர் ஏதாவது பேசியிருக்கிறாரா என அந்தநாட்களின் சட்டமன்ற குறிப்புகளைப் பார்த்தபோது அவர் அரசாங்க பக்கம் நின்று ஆசப் அலி தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்த பதிவை பார்க்கமுடிந்தது.

பம்பாயில் போராட்டத்தின் வீச்சும் பல்வேறு நகர்களுக்கு அப்போராட்டம் பரவியதையும் இந்தியன் ரிஜிஸ்டர் பதிவு நமக்கு எடுத்துச் சொல்கிறது. மதராஸ் போராட்ட பதிவுகளையும் அது தருகிறது.

பெர்சி அவர்களின் புத்தகம் அவர் உள்ளிட்ட ஆங்கில அதிகாரிகளுக்கும் போராட்டக்கமிட்டி தலைவர் கான் அவர்களுக்குமான அருமையான உரையாடல் ஒன்றை பதிவு செய்துள்ளது. காந்தியடிகள் இதை அறிந்தாரா எனத் தெரியவில்லை. ஆனால் அவரது அறிக்கையில் இந்தப் போராட்டத்தை அகிம்சைவழி என உரிமை பாராட்டுவதை நிராகரித்திருந்தார்.

இந்த சிறு புத்தகம் 8 தலைப்புகளில் தன் விவாத பரப்பை எடுத்துக்கொண்டுள்ளது. சொல்லப்பட்ட விஷயங்கள் திரும்பவும் சில இடங்களில் வரக்கூடும். ஆனால் அவை வெவ்வேறு பதிவுகள் என்பதால் அவர்கள் எதற்கு அழுத்தம் தந்து சொல்லிச் செல்கின்றனர் என்பதையும் சேர்த்து நாம் பார்க்கமுடியும். எட்டாவது தலைப்பு போராட்டத்திற்கு பின்னர் என்பதாக அமைந்துள்ளது. புத்தகத்தை முடிக்கும்போது இப்படித்தான் இறுதி செய்துள்ளேன்.

தன்னெழுச்சியோ- அரசியல் விழிப்புணர்வுடன் எழுந்தார்களோ எது எப்படியாயினும் போராளிகள் பிரிட்டிஷ் அடக்குமுறை அவமானங்களுக்கு எதிராக எழுந்து நின்றார்கள். ஆயுதங்களுடன் வாழப் பயிற்சி எடுத்தவர்கள் என்ற வகையில் அதை அவர்கள் கையில் எடுத்தனர். வெற்றி பெறமுடியாமல் போயிருக்கலாம். 20 வயது இளைஞர்கள் ஆயிரக்கணக்கானவர் இந்த சுயமரியாதைப்போரில் தங்கள் வாழ்க்கையை முற்றிலுமாக தொலைத்தனர். போராடிய அவர்களின் பெருமிதத்தை அனைவரும் பகிர்ந்துகொண்டாலும் அவர்கள் சோகத்தை அவர்கள் மட்டுமே அனுபவிக்க நேர்ந்தது. எவராலும் அவர்கள் வாழ்க்கையை மீட்டுத்தரமுடியவில்லை. அவர்களில் பலர் எங்கோ மறைந்தனர். ஊரில் ஏதாவது மரியாதை இருந்ததோ என்னெவெனத் தெரியவில்லை.

தத், சிங், போஸ் என சில குரல்கள் மட்டும் தங்கள் நினைவுகளை உரக்கச் சொல்லி சென்றுள்ளனர். கான் குறித்து வேறு பதிவுகள் இருக்கலாம். வரலாறு அவர்களை பெருமிதமும் சோகமுமாக பல திசைக்கொண்டு பதிவிட்டுக்கொண்டுவிட்டது. தேடிப்போனால் அவர்கள் நம் நினைவுகளின் ஊடே நீந்திக்கொண்டிருப்பர்.

கைக்கு எட்டிய பதிவுகளின் ஊடாக இந்த எழுச்சி குறித்த சிறிய புத்தகம்

இனி வாசகர்களை தேடிக்கொள்ளும் என்ற நம்பிக்கையுடன் வழக்கம்போல் மின்புத்தகமாக வெளியிடுகிறேன்.

ஆர். பட்டாபிராமன்

19-1-2022

# துணை நின்ற ஆதாரங்கள் (References) :


1. Rin Mutiny 1946 by Biswanath Bose
2. The Indian Naval Revolt 1946 Percy s Gourgey
3. Contribution of Armed Forces to the Freedom Movement by Maj Gen VK Singh
4. The Indian annual register 1946 Vol 1
5. Gadhar party Article on RIN 1946
6. Frontier Article தமிழில் நடேசன்
7. Mainstream weekly Oct 2008 Ajeet Jawed Article
8. Amitabha RoyChowdhury Article
9. Pramod Kapoor Article
10. CPI CC Resoultion Feb 1946
11. CPI Memo submitted to RIN Enquiry Commission May 1946
12. The Rin Strike PPH ( EMS Preface)
13. Communists and the Rin Mutiny PD Article April 2020
14. CLAD ( Central Legislative Assembly Debate) Feb 22, 23 1946

# 1. போராட்டமும் பின்னணியும்

பம்பாயில் ராயல் இந்தியன் நேவியின் வீரர்கள் பிப்ரவரி 18, 1946 அன்று பெரும் எழுச்சியை தொடங்கினர். அக்கிளர்ச்சி கடலோரத்திலிருந்து நிலத்திற்கும் பம்பாயில் பரவியது. கராச்சி, கல்கத்தா, மதராஸ் என போராட்டம் நீண்டது. சுகாதாரக்கேடான சுவையற்ற உணவும், பிரிட்டிஷ் மேலதிகாரிகள் தொடர்ந்து செய்துவந்த அவமதிப்புகளும் தன்னெழுச்சிக்கு உடனடியான காரணங்களாக அமைந்தன.

பல்வேறு கப்பல்களில் இருந்த 20 ஆயிரம் வீரர்கள் இந்த போராட்டத்தில் தங்களை இணைத்துக்கொண்டனர். இவர்களுக்கு ஆதரவாக விமானப்படையினரும் சேர்ந்துகொண்டனர். சுடச்சொல்லப்பட்ட உத்தரவை இராணுவப்படைவீரர்கள் மீறினர். ஆங்கிலப்படையினர் வந்து இதை பெரும் மோதலாக்கினர். பம்பாய் தொழிலாளர்கள் வீரர்களுக்கு ஆதரவாக போராட்டத்தில் இறங்கினர். பிப்ரவரி 22ல் பொதுவேலைநிறுத்தம் நடைபெற்றது. இந்த மோதல்களில் 200க்கும் மேற்பட்டோர் உயிரிழந்தனர். 1500பேருக்காவது காயம் ஏற்பட்டிருக்கலாம். போராட்டத்தை ஒடுக்க கனரக ஊர்திகளை அரசாங்கத்தினர் பயன்படுத்தினர். 'RIN Mutiny' - 'RIN Upraising' - 'RIN strike' என பல பெயர்களில் இந்நிகழ்வு வரலாற்றில் இடம்பெற்று 75 ஆண்டுகளை இப்போராட்ட நிகழ்வு கடந்துள்ளது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி இப்போராட்டத்தைமுழுமையாக ஆதரித்து நின்றது. அதேநேரத்தில் தங்களை வழிநடத்த வருமாறு அரசியல் கட்சிகளுக்கு விடுக்கப்பட்ட வேண்டுகோளோ, கடற்படையை நாங்கள் அத்தலைவர்களிடம் ஒப்படைக்கிறோம் என சொல்லப்பட்டதையோ எந்த அரசியல் கட்சியும் ஏற்கவில்லை. காங்கிரஸ் கட்சித்தலைமையும், லீக் தலைமையும் கோரிக்கைகள் தீர உடன் நிற்பதாகவும்- போராட்டத்தை விலக்கிக்கொள்ளவும் அறிவுறுத்தியிருந்தன.

சரணடைந்தவர்களில் 2000 பேர்கள் முகாம்களுக்கு அழைத்துச்செல்லப்பட்டனர். 500 பேருக்கு தண்டனைகள் கொடுக்கப்பட்டது.

பிப்ரவரி 17 அன்று வீணாகிப்போன உணவு வழங்கப்பட்டதையடுத்து அங்கு வாக்குவாதம் ஏற்பட்டது. கேள்வி கேட்டவர்களை அங்கிருந்த அதிகாரி நாய்- பிச்சைக்காரர்கள் என ஏளனத்துடன் அவமதித்தது கடும் கோபத்தை உருவாக்கியது.

பிப்ரவரி 18 அன்று உணவு மறுப்பு போராட்டத்தை வீரர்கள் கடைப்பிடித்தனர். பயிற்சி மைதானத்திற்கு வரமுடியாது- வேலைநிறுத்தம் என்றனர். பேச்சுவார்த்தை எனில் அரசியல் தலைவர் எவர் முன்னிலையிலாவது அது நடைபெறவேண்டும் என்பதும் கோரிக்கையானது. கிளர்ச்சி செய்தி பரவியதால் அசாம்- பெங்கால்- பஞ்சாப்- திருவாங்கூர்- காத்திவாத், ராஜ்புத்- டல்ஹவுசி, கலாவதி- நீலம்- ஹீரா போன்ற கப்பல்களிலும் கிளர்ச்சி ஏற்பட்டது. கொழும்புவில் இருந்த பரோடா கப்பல் மாலுமிகளும் அங்கு உண்ணாவிரதம் என்றனர்.

கராச்சியில் இருந்த மாயுஞ், ஹிமாலயா, பகதூர், திலாவர், சமக் போன்ற கப்பல் மாலுமிகள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். அவர்கள் வீதியிறங்கி ஊர்வலம் சென்றனர். பல இடங்களில் பிரிட்டிஷ் கொடி இறக்கப்பட்டது. இந்து முஸ்லீம் ஒற்றுமை முழக்கங்களும், ஏகாதிபத்தியம் ஒழிக முழக்கங்களும் எழுந்தன. காங்கிரஸ்- லீக்- கம்யூனிஸ்ட் கட்சி கொடிகளை போரட்டக்காரர்கள் ஏற்றினர்.

போராட்டங்களை முறைப்படுத்த எம் எஸ் கான், மதன்சிங் பொறுப்பேற்றனர். வேலைநிறுத்தக்கமிட்டியில் பல பிரிவினரை சார்ந்தவர்கள் இருப்பதை பார்க்கமுடியும். எம் எஸ் கான், மதன் சிங், பி சி தத், பேடி, நவாஸ், பசந்த் சிங், நூருல் இஸ்லாம், அஸ்ரஃப் கான், சென்குப்தா ( சி பி அய் தலைவர்களுடன் தொடர்பில் இருந்தவர்), கோமெஸ் ( ஆங்கிலோ இந்தியர்), முகமது ஹுசைன் ( வயிற்றில் குண்டு பாய்ந்து பிழைத்து வந்தவர்). ராயல் என்பதை நீக்கி இந்திய கப்பற்படை என தங்களை அவர்கள் அழைத்துக்கொள்ளத் துவங்கினர். டில்லி, தானே, புனே பகுதிகளிலும் மாலுமிகளுக்கு ஆதரவு கிட்டியது.

பம்பாயில் ‘மராத்தா கார்ட்ஸ்’ எனும் வீரர்கள் கப்பற்படை போரட்டத்தை ஒடுக்க அனுப்பபட்டபோது, மாலுமிகள் அவர்களிடம் சகோதரர்களே இப்போராட்டம் நாட்டின் விடுதலைக்கானது- வெறும் உணவிற்கானதல்ல

என்றனர். அவர்கள் போராட்டக்காரர்களை செவிமடுத்தனர். ஆங்கிலபடைவீரர்களை மக்கள் தங்கள் வீடுகளில் நின்றுகொண்டு செங்கல்லால் தாக்கினார்கள் . வீரர்கள்- மக்கள் இரத்தம் கலந்த எழுச்சியாக இது வர்ணிக்கப்படுகிறது. மாலுமிகளுக்கு மக்கள் உணவுகொண்டுவந்து கொடுத்து தங்கள் நல்லுறவைக் காட்டினர்.

அடக்குமுறையில் பிப்ரவரி 21 அன்று ஒரு மாலுமியும், பிப்ரவரி 22 அன்று கராச்சியில் 21 மாலுமிகளும் தங்கள் இன்னுயிரை இழக்கவேண்டியதானது. பிப்ரவரி 23 பெரும் எண்ணிக்கையிலான சாவை பார்த்தது.ஏறத்தாழ மாலுமிகள், இதர போராளிகள் என 250பேர் உயிரிழந்தனர். ஏறத்தாழ1500 பேர் வேலைநீக்கம் செய்யப்பட்டனர். காங்கிரஸ், லீக் தங்கள் பக்கம் நிற்காததைப் பார்த்து அக்கட்சிகளின் கொடிகளை இறக்குவதும் நடந்தது.

போராட்டக்குழுவில் இருந்த 36 பேர் கூடி தங்கள் கோரிக்கைகளை வைத்தனர்.

ஐ என் ஏ வீரர்களை விடுவிக்கவேண்டும்,

மாலுமிகளை அவமானப்படுத்திய கமாண்டிங் அதிகாரி கிங் மீது நடவடிக்கை-

சமாதான காலத்தில் வேலையிழப்பிற்கு உள்ளானவர்க்கு வேலை வாய்ப்பு

பிரிட்டிஷாருக்கு கொடுக்கப்படும் ஊதியத்திலிருந்து பாரபட்சமாக தங்களுக்கு தரக்கூடாது.

பஞ்சப்படி, இதரப்படிகளிலும் இந்திய மாலுமிகளுக்கு பாரபட்சம் கூடாது.

உணவகங்கள் அனைத்திற்கும் செல்ல அனுமதி.

வேலைநீக்கம் செய்து அனுப்பும்போது துணி, பெட்டிகளை திருப்பிக்கேட்கக்கூடாது.

இந்தோனேஷியாவில் இருக்கும் இந்தியப்படையை வாபஸ் பெறவேண்டும்.

மேற்கூறிய கோரிக்கைகளுக்கு ஆதரவு வேண்டி போராட்டக்குழு காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளை வேண்டினர்.

மதராசில் அடையார் கப்பலிலும் விசாகப்பட்டினத்தில் சோனாவதி கப்பலிலும் போராட்டம் எழுந்தது. மதராசில் இன்குலாப் முழக்கங்களுடன் பிப்ரவரி 25 அன்று வேலைநிறுத்தம் நடந்தது. ஜபல்பூர், அஸ்ஸாம், டெல்லியிலும் போராட்டங்கள் எழுந்தன. அதிகாரி காட்ஃப்ரே மிரட்டலை எதிர்த்தும் வல்சுரா பயிற்சி பள்ளிக் கப்பல் விசுவாசமாக இருக்கிறது என்ற அறிவிப்பை எதிர்த்தும் அங்கு போராட்டம் எழுந்தது.

இந்த வரலாற்றுமுக்கியத்துவம் நிறைந்த எழுச்சிக்கு முன்னால் 1942-45க்குள் கப்பற்படையில் 9 போராட்டங்கள் நடந்ததையும் நாம் அறிகிறோம். மார்ச் 3, 1942ல் மெக்கானிக்கல் பயிற்சி பம்பாய், ஜூன் 22, கொங்கன் டோபர்மோரி இங்கிலாந்து, செப்டம்பர் 1942 ஒரிஸ்ஸா தென்னாப்பிரிக்காவில், அதேபோல் செபடம்பரில் கைபர் இங்கிலாந்து, ஜூன் 1944ல் அக்பர் பம்பாய், ஜூலை 1944ல் ஹம்லவார், ஜூலையில் சிவாஜி, மார்ச் 16, 1945ல் ஹிமாலயா கராச்சி, ஏப்ரல் 1945 சிவாஜி என போராட்டங்கள் ஆங்காங்கே எழாமல் இல்லை.

இதற்கான காரணங்கள் இருந்தன. 1939ல் இரண்டாம் உலகப்போர் நேரத்தில் கப்பற்படை அதிகாரிகள் எண்ணிக்கை 212 என்பது ஆறு ஆண்டுகளில் 2852 ஆக உயர்ந்தது. ஆனால் அப்போது இந்தியர் 42 என்கிற எண்ணிக்கை 1945ல் 949 ஆக மட்டுமே உயர்ந்தது. அதிகாரிகளில் இந்தியர்களைவிட மூன்று மடங்கு பிரிட்டிஷ்காரர்களுக்கு வாய்ப்பு இருந்ததைப் பார்க்கிறோம். வீரர்கள் 1475லிருந்து 21193 ஆயினர். போரில் பிரிட்டிஷ் அதிகாரிகளே அதிகார முக்கியத்துவம் பெற்று இருந்தனர்.

கப்பலில் வசதிகள் மேம்படுத்தப்படவில்லை. பெரும் இட நெருக்கடி- மோசமான உணவு - நோய் பாதிப்பு – மருத்துவசதிகளின்மை - குறைபாடுகளை சுட்டிக்காட்டுபவர்களுக்கு கடுமையான தண்டனைகள் - விடுப்பு மறுப்பு போன்ற அவதிகளுக்கு இந்திய மாலுமிகள் உள்ளாயினர். ஐ என் ஏ வழக்கு நடந்தது. நேரு போன்றவர்கள் அதை நடத்தினர். இதை மாலுமிகள் உன்னிப்பாக கவனிக்கத்துவங்கினர். அவர்கள் மீது ஐ என் ஏ

செல்வாக்கும் படர்ந்தது. போர் முடிந்தும் ஊர் செல்ல முடியாத உளைச்சல் பலருக்கும் இருந்தது.

எச் எம் ஐ எஸ் தல்வாரில் உணவு பிரச்னை எழுந்தது. காலையில் தரப்படும் உணவான ரொட்டி- பருப்பை மதியம் நீரை ஊற்றி தந்ததை மாலுமிகள் எதிர்த்தனர். 29 வீரர்கள் உணவு வேண்டாம் என மறுத்தனர். நாற்றமடிக்கும் உணவு என அதிகாரிகளிடம் புகார் அளித்தனர். உணவுப்பிரிவு மூன்றுவகை ரேஷன்களாக இருந்தது. இங்கிலீஷ் ரேஷன் அது இ ஆர், இந்தியர் ரேஷன் அது ஐ ஆர் மற்றொரு பிரிவு விஜிடேரியன் ரேஷன் வி ஆர் என்று வழங்கப்பட்டது. இ ஆர் உணவுத்தரத்தில் மேம்பட்டதாக இருந்தது.

கமாண்டர் கிங் மறுநாள் பிப்ரவரி 18 அன்று 14 வீரர்களை சம்மன் செய்தார். அன்று காலையில் உணவை மறுத்து கூடுதலாக வீரர்கள் முழக்கம் எழுப்பினர். காலை பரேட் அழைப்பு புறக்கணிக்கப்பட்டது. நிலைமை அறிந்த கிங் காலையில் ஏதும் சொல்லாமல் தனது உணவிற்கு சென்றுவிட்டார். அவர் திரும்புகையில் ஜெய்ஹிந்த் முழக்கம் அதிகரித்தது. சமாதானம் பேச வந்த அதிகாரிகளை மாலுமிகள் திரும்ப அனுப்பினர். சிக்னல் பகுதியினரும் போராட்டத்தில் சேர்ந்ததால் எழுச்சி வீச்சானது.

முன்னதாக பிப்ரவரி 1 கப்பற்படை தினத்தில் பெயிண்ட்டால் ஜெய்ஹிந்த், குவிட் இந்தியா எழுதப்பட்டிருந்தன. பெயிண்ட் கையுடன் அலைந்த பலாய் சந்திர தத் கைது செய்யப்பட்டார். அவர் தந்திப்பிரிவை சார்ந்தவர். அவரது லாக்கரில் நேருவின் உரைகள், காங்கிரசுக்கு கம்யூனிஸ்ட்கள் பதில் போன்றவை இருந்தன. வேறு ஓர் அறிக்கை ஆசாத் ஹிந்துஸ்தான் மூலம் மீண்டும் குவிட் இந்தியா நடத்துவதே பிரிட்டிஷாரை அப்புறப்படுத்த வழி என்றது. பிப்ரவரி 6 அன்று அதிகாரி கிங் அவர்களின் காரில் குவிட் இந்தியா என எழுதப்பட்டது. கிங்கிற்கு மிரட்டல் கடிதங்கள் வந்தன. பிப்ரவரி 8 அன்று கிங் பெண் வீரர் பகுதிக்கு சென்றபோது அவரை கேலி செய்திட பூனை போல ஒலி எழுப்பினர். கிங் கடுமையாக கோபம் அடைந்து வேசி மகன்கள், காட்டுமிராண்டிகள், கூலிப்பசங்க என கத்தினார். கிங்கின் வசவுகளை மாலுமிகள் புகார் ஆக்கினர். கிங் தன்னை விசாரிக்க வந்தவர்களிடம் எவரும்

கட்டுப்படாமல் இருப்பதை சுட்டிக்காட்டினார்.

பிப்ரவரி 18 காலையே நிலைமைகள் மோசமானதை அடுத்து பம்பாய் Flag Officer க்கு தகவல் தரப்படுகிறது. பெண் வீரர்கள் வெளியேற்றப்படுகின்றனர். வெடிபொருட்கள் ஆயுதங்களை சில வீரர்கள் castle Barracksக்கு எடுத்து சென்றனர். பேச்சுவார்த்தைக்கு Flag Officer வருகிறார் எனச் செய்தி சென்றது. அவர் வந்து அன்று மாலை கிங் இடத்திற்கு இனி ஜேம்ஸ் என்கிற அதிகாரி பொறுப்பேற்பார் என்கிறார். பணிக்கு திரும்ப உத்தரவிடப்படுகிறது. பழிவாங்கல் இருக்காது என்கின்றனர்.

சிக்னல் பகுதியில் எம் எஸ் கான் தலைமையில் போராட்டக்குழு ஒன்றை அமைக்கின்றனர். வேலைநிறுத்தம் என்ற செய்தியை 'பிரி பிரஸ் ஜர்னலுக்கு' அனுப்புகின்றனர்.

பி சி தத் மேற்குவங்க பர்துவான் பகுதியில் 1923ல்பிறந்தவர். அவருக்கு எழுச்சியின் போது வயது 23. பள்ளிக்காலத்திலேயே பங்கிம் சந்திர சட்டர்ஜி, தாகூர், சரத் சந்தர் அவரிடம் சென்றனர். சிவாஜியின் வீரம் வசீகரித்தது. 1940ல் பாட்னா சென்ற தத் டெலிகிராபி பயிற்சி எடுக்க வாய்ப்பு பெற்றார். இதனால் பிப்ரவரி 28, 1941ல் அவரால் ரின் எனப்படும் ராயல் இந்தியன் நேவியில் ஒயர்லெஸ் டெலிகிராபிஸ்ட்டாக சேர முடிந்தது. அப்புரட்சியின் தருணத்தில் அவருக்கு 5 ஆண்டுகள் கப்பற்படை சேவையிருந்தது. அங்கு அவருக்கு 'நாய் மகனே, குரங்கு, பன்றி, ஆட்டுக் கூட்டம்' என்ற வசைமொழிகள் கேட்கலானது. உடல்ரீதியான தாக்குதலைவிட அதிக வலியைத்தரும் வசைச்சொற்களை அவர்கள் செவிமடுத்தனர். தண்ணீர் குடிக்க அலுமினிய குவளைத்தான் கொடுத்தனர். அரசியல் கலப்பற்றவர்கள் என அறிந்தால்தான் அவர்களுக்கு இராணுவத்தில், நேவியில் இடம் கிடைக்கும்.

இரண்டாம் உலகப்போர் காலத்தில் இந்திய வீரர்கள் எதற்காக எவருக்காக போராடுகிறார்கள் என்கிற கேள்வி தத் போன்றவர்களிடத்தில் தாக்கத்தை உருவாக்கியது. போர் முடிந்தவுடன் இவர்களில் பலர் தல்வார் கப்பல் shore based signal school க்கு அனுப்பப்பட்டனர். தத்திடம் மலேயாவிலிருந்து வந்த சலில் சியாம் இந்திய இராணுவத்தினர்

கதைகளையெல்லாம் சொன்னார். ஆசாத் ஹிந்த் அரசாங்கம் சார்பில் நேரு மற்றும் சரத் போஸ் அவர்களுக்கு எழுதிய கடிதங்கள் சிலவற்றை சலீல் ஷ்யாம் வைத்திருந்தார். அது வெளித்தெரிந்தால் தேசத்துரோக வழக்கு வந்து சேரும். வெடிக்கப்போகும் குண்டை கையில் தாங்கள் வைத்திருந்த நிலையில் இருந்ததாக தத் சொன்னார். தத் உதவியுடன் சரத் போஸ் அவர்களுக்கு சேர்ப்பிக்க முடியுமா என்பது ஷியாமின் எதிர்பார்ப்பு. தத் தன் நண்பர்களிடம் ஆசாத் ஹிந்த்- சுபாஷ் குறித்து தேநீர் நேரத்தில் காண்டீனில் பேசத்துவங்கினார். அங்கு ஆசாத் ஹிந்த் என்கிற 20 பேர் அமைப்பும் நான்கு மாதமாவாது கூடியிருக்கும். நேதாஜியின் அய் என் ஏ குறித்தும் நமது உரிமைகள் எவை என்பது குறித்தும் அவர் பிரசுரம் ஒன்றைக்கொணர்ந்தார்.

தத் குழுவில் இருந்த ஆர் கே சிங் தனது ராஜினாமாவை ரின் அதிகாரிகளிடம் தந்தார். அப்படி செய்தது ஏன் என்று கேட்டு அவருக்கு குற்றப்பத்திரிகை தந்தனர். பிப்ரவரி 2 அன்று கமாண்டர் இன் சீஃப் வருகிறார் என அறிந்துதான் தத் அவரது பெயிண்ட் வாசகங்களை எழுதினார். பிரசுரங்களையும் அவர் விநியோகிக்க முயன்றார். விடியற்காலை 5 மணிக்குத்தான் காவலர்கள் அதைக்கண்டனர். நான்கு பயிற்சியாளர்கள் தத் 'கம் பாட்டில்' சகிதம் அலைந்ததாக தெரிவித்தனர். தத்தின் கைதை பம்பாய் பத்திரிகைகள் அவர் படத்தை வெளியிட்டு எழுதின.

பொதுவாக கம்யூனிகேஷன் பிரிவில் இருந்தவர்கள் அரசியல் விழிப்புணர்வு கொண்டவர்களாகவும், பட்டதாரிகளாகவும் இருந்தனர். உயர்மட்ட அதிகாரிகளாக கமாண்டர், கேப்டன், ரேர் அட்மிரல், வைஸ் அட்மிரல், அட்மிரல் இருந்தால், அடிமட்ட வீரர்கள் பகுதியில் பாய்ஸ், ஆர்டினரி ரேட்டிங்ஸ், லீடிங் ரேட்டிங்க்ஸ் போன்றவர்களும் இடைத்தட்டில் பெட்டி ஆபிசர்கள், லெஃப்டினண்ட் இருந்தனர். சிலர் கரைப்பகுதி ஒழுக்கக்கேடுகளுடன் தொடர்புகொண்டவராக இருந்து தண்டனை பெறுவதும் உண்டு. ஆனால் அனைத்து வீரர்களும் 'action stations' எனில் கடமை தவறாமல் இருந்தனர். தல்வார் செய்திதொடர்பு பிரிவில் மட்டும் 1500 ரேட்டிங்ஸ் பணிபுரிந்து வந்தனர்.

போஸ் தனது ரின் கலகம் என்கிற புத்தகத்தில் இந்த போராட்ட

கப்பல்கள் எவை என்ற பட்டியலை தந்துள்ளார். மொத்தமிருந்த 30 ஆயிரம் பணியாளர்களில் 20 ஆயிரம் வீரர்களாவது பங்கேற்றனர். கலகத்தில் பங்கேற்ற கேடர்கள் எனப் பார்த்தால் seamen, Stokers, signalmen, wireless Operators, writers, sick berth attendants, Stewards, cooks, topas ( sweepers) ஆகியோர் இருந்தனர். Seamen இதில் துப்பாக்கி பயிற்சி பெற்றவர்கள். கப்பலில் பிரிட்டிஷ் விரோத தேசபக்த வாசகங்களை எழுதியதற்காக பி சி தத், ஆர்.கே சிங், சலீல் ஷ்யாம் கைது செய்யப்பட்டனர்.

போஸ் பதிவின்படி பம்பாயில் நடந்த மக்கள் எழுச்சியில் அரசாங்க தானிய கிடங்குகள் 32, வங்கி அலுவலகங்கள் 8, அஞ்சலகங்கள் 10, போலீஸ் நிலையங்கள் 10 தீக்கிரையாக்கப்பட்டன. கலவரத்தில் 247 பேர் கொல்லப்பட்டதாகவும், 1037பேர் காயமடைந்தனர் என்றும் சொல்கிறார். இவை கீசிங் ஆவண கிடங்கு பைல்கள் மூலம் கிடைக்கப்பெற்றதாக போஸ் குறிப்பிடுகிறார்.

# 2. நினைவுகளும் பதிவுகளும்

அஜீத் ஜாவத் மெயின்ஸ்டீரீம் பத்திரிகையில் 2008 அக்டோபரில் ரின் போராட்டம் குறித்து எழுதியிருந்தார். அதில் அவ்வெழுச்சிதான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு சாவு மணியடித்ததாக எழுதுகிறார். அது திடீர் தன்னெழுச்சி அல்ல. வேலைநிறுத்தம் துவங்கி 48 மணிநேரத்தில் அப்போராட்டம் பற்றி பரவியது. 74 கப்பல்களில் போராட்டம் எழுந்தது. எம் எஸ் கான், மதன் சிங் இருவரும் பஞ்சாபிகள்- டெலிகிராபி சார்ந்தவர்கள். பேடி பசந்த சிங், சென்குப்தா, நவாஸ், அஷ்ரப் கான், கோமஸ், முகம்மது ஹூசைன் போன்றவர்களும் கமிட்டியில் இருந்தனர்.

போராட்டம் அரசியல் வடிவம் எடுத்தது. பொருளாதார கோரிக்கைகள் பின்னுக்கு போயின. உள்துறை குறிப்பு பைல் ஜனவரி 7, 1946 அன்றே தல்வார் கப்பல் மாலுமிகள் மத்தியில் கம்யூனிஸ்ட் செல்வாக்கு இருக்கிறது. 15 மாலுமிகளாவது சி பி அய் பத்திரிகைகளை படிப்பார்கள் என்று சூசகமாக சொன்னது.

கமாண்டர் இன் சீப் காட்ஃப்ரே அவர்களை தொழிலாளர் கட்சியின் பிரதமராக இருந்த அட்லி முழுமையாக நம்பினார். போராட்டத்தை ஒடுக்க அவசிய நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்பதையும் அவர் தெரிவித்திருந்தார்.

1946 எழுச்சியில் பங்கேற்ற சண்டிகர் மதன்சிங் அப்போது இளைஞர். தனது 80 ஆம் வயதில் தன்னிடம் எழுச்சி தொடர்பாக கேட்கப்பட்டவைகளுக்கு நினைவிலிருந்து அவர் பதில் தந்தார். அதில் அதிகாரி கிங் பற்றி கடுஞ்சொல் வேண்டாம்- தகுதியற்ற மனிதனையும் நாம் வெறுக்கக்கூடதென்றார். அன்று தாங்கள் பாடிய சில புரட்சிகரப் பாடல்களை அவர் முனுமுணுத்தார். என் கண்களால் அப்பாவி தொழிலாளர்கள் சுடப்படுவதைக் கண்டேன். பெண்கள் ஓடோடிவந்து காயம்பட்டவர்களுக்கு சிகிட்சை அளித்தனர். எவரும் மதம் பார்க்கவில்லை. காங்கிரஸ் தலைமை எங்களை சரணடைய சொன்னது. நாங்களும் மக்களை நம்பி சரணடைந்தோம். தனிமைச் சிறையில்

வைக்கப்பட்டோம். நானும் 3 1/2 மாதங்கள் சிறையில் இருந்தேன் என்று பகிர்ந்துகொண்டார். இவரை மறக்காமல் இந்திய கப்பல்படை அவர் நினைவை போற்றும் வகையில் ஆபத்துக்கால உதவி கப்பல் ஒன்றிற்கு அவரது பெயரைச் சூட்டியது. இச்செய்தியை இந்துஸ்தான் டைம்ஸ் ஜனவரி 2007 பிரசுரித்திருந்தது.

கராச்சியில் நடந்த போராட்டம் குறித்து சமக் கப்பல் சார்ந்த அனில்ராய் நினைவு கூர்ந்துள்ளார். அங்கு பிப்ரவரி 1946ல் போராட்டம் பகதூர், ஹிமாலயா, சமக் கப்பல்களில் எழுந்தது. பிப்ரவரி 20 அன்று அதிகாரிகளின் பிடியிலிருந்து கப்பல் கட்டுப்பாட்டை மாலுமிகள் எடுத்துக்கொண்டனர். கொடுங்கோலர்களே உங்கள் நாட்கள் முடிந்தன - கலகமல்ல- ஒன்றுபட்ட எழுச்சி என முழக்கங்கள் எழுந்தன. தெருக்களில் இறங்கி மாலுமிகள் மக்களுடன் கலந்தனர். பலூச் இராணுவ வீரர்கள் போராட்டத்தை ஒடுக்க அனுப்பப்பட்டனர். ஆனால் பலுச்சியர்கள் தங்கள் சொந்த சகோதரர்களை சுடமுடியாதென்றனர். ஹிந்துஸ்தான் கப்பலை சுற்றி பிரிட்டிஷாரைக் கொண்ட படைகள் நிறுத்தப்பட்டன. அங்கிருந்த மாலுமிகளுக்கும் அவர்களுக்கும் தாக்குதல் நடந்தது. 6 வீரர்கள் சுடப்பட்டு கொல்லப்பட்டனர். 30 பேர்களுக்கு காயம் ஏற்பட்டது. தாக்குதல் இருபக்கத்திலும் 4 மணிநேரம் நடந்திருக்கலாம். சரண்டர் அடைவது என வீரர்கள் பின்னர் முடிவெடுத்தனர்.

கராச்சியில் இருந்த கம்யூனிஸ்ட்கள் பிப்ரவரி 23 பொதுவேலைநிறுத்தம் அறிவித்தனர். இட்கா மைதானத்தில் 30 ஆயிரம்பேர் ஆதரவாக திரண்டனர். இதில் மாணவர்கள், தொழிலாளர், இந்து முஸ்லீம் என பல அடையாள மக்கள் இருந்தனர். செக்ஷன் 144 இருந்தது. போலீஸ் துப்பாக்கி சூடு நடத்தியதில் 25 பேர் காயமடைந்தனர். போராட்டத்தில் முக்கியமானவர்களாக கருதப்பட்ட அனில் ராய், அக்பர் அலி, ஹிராலால் ஆகிய மூவரும் கோர்ட் மார்ஷல் செய்யப்பட்டனர். 18 வயதே கொண்ட அப்துல் பாகி அஜ்மீர், முபாரக் அகமது தண்டனை பெற்றனர்.

குஜராத் கத்தியவார் என்கிற சிறு கப்பலில் கலகம் ஏற்பட்டது. அவர்களுக்கு ஹிந்துஸ்தானில் பிரச்னை என்ற செய்தி வந்தவுடன் பிப்ரவரி 21ல் 120 பேரை மட்டுமே கொண்ட அக்கப்பல் மாலுமிகளும் போராட்டம்

என்றனர். அப்துல் கரீம் தலைமையில் கப்பல் கேப்டனை அவர்கள் பூட்டிவைத்தனர். பம்பாய் செல்லவேண்டிய அவர்கள் ஹிந்துஸ்தான் கப்பல் தோழர்களுக்கு உதவ கராச்சி சென்றனர். அங்கு அவர்கள் சரண்டர் ஆகிவிட்டனர் என அறிந்து திரும்பவும் பம்பாய் நோக்கி சென்றனர். அங்கு போவதற்குள் போராட்டம் ஒடுக்கப்பட்டு மாலுமிகள் சரணடைந்தனர்.

கல்கத்தாவில் நங்கூரமிடப்பட்ட கப்பல் ஹூக்ளியில் பிப்ரவரி 22 போராட்டம் துவங்கியது. சி பி அய் அறைகூவலையேற்று லட்சம் தொழிலாளர் மாலுமிகளுக்கு ஆதரவாக வேலைநிறுத்தம் செய்தனர். பிப்ரவரி 25வரை நடந்த போராட்டம் ஒடுக்கப்பட்டு பிப்ரவரி 26 அன்று முடிவிற்கு வந்தது. வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். பஞ்சாப் அம்பாலாவில் கப்பற்படை வீரர்களுக்கு ஆதரவாக பிப்ரவரி 22 அன்று 600 ஏர்போர்ஸ் வீரர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். மார்க்கெட் பகுதிகளில் பிரிட்டிஷ் எதிர்ப்பு முழக்கங்களுடன் ஊர்வலம் சென்றனர்.

அமிதப் ராய் சக்ரவர்த்தி என்பார் பதிவில் பி சி தத் 1945 டிசம்பரில் கைதாகி 17 நாட்கள் கழித்து தல்வார் திரும்பினார் என்பது சொல்லப்படுகிறது. அவருக்கு தோழர்களாக கப்பலில் கைலாஷ் நாரயண் டிக்கோ, மதன் சிங், பானிபூஷன் பட்டாசார்யா இருந்தனர். இதில் பட்டாசார்யா முன்னர் குவிட் இந்தியா போராட்டத்தில் பங்கேற்ற பின்னணி கொண்டவர். சி பி அய் உறுப்பினராக இருந்தவர் என சொல்கிறார் ராய் சௌத்ரி. சி பி அய் had planned out systematic infiltration of its eligible cadres, especially from Bengal and Maharashtra, to join the RIN for this purpose என அவர் எழுதுவதற்கு ஆதாரம் என்ன எனத்தெரியவில்லை. பின்னால் நாம் காணவிருக்கும் சி பி அய் ஆவணத்தில் நாங்கள் தூண்டவில்லை- துணை நின்றோம் என்றே சொல்லப்பட்டுள்ளது.

ஆகஸ்ட் 9, 1943ல் அதாவது குவிட் இந்தியா முழக்கத்தின் முதலாமாண்டில் இரகசிய வேலைநிறுத்த கமிட்டி ஒன்றை நேவி, ஆர்மி, ஏர்போர்ஸ் என அனைத்து பிரிவிற்கும் மதன்லால் சாக்சேனா, சந்திரசிங் கர்வாலி, பி கோட்டயம் ஆகியோரைக்கொண்டு அமைத்தனர். முதலில் பிப்ரவரி 18, 1944ல் ஒரே நேரத்தில் மூன்று இராணுவப்பிரிவுகளிலும் உணவில்லை-

வேலை கிடையாது என்ற இயக்கத்தை துவங்க திட்டமிட்டனர்.

இந்த பிரச்சனை தொடர்பாக இரு பெண் கப்பற்படையினர் ஊர்மிலா பாய், அனுபா சென் கைதாயினர். கோபமடைந்த வீரர்கள் பிப்ரவரி 11, 1944 அன்று நேரடி நடவடிக்கையில் பம்பாயிலும் கராச்சியிலும் இறங்கினர். பிரிட்டிஷ் வீரர்களுக்கும் இந்தியர்களுக்கும் நடந்த தாக்குதலில் 35 பிரிட்டிஷ் வீரர்கள் உயிர் துறந்தனர். 300 பேர்கள் காயமடைந்தனர். இந்திய தரப்பில் சாவு 11 என்றால் 600 பேர்கள் காயமடைந்தனர். இவ்வழக்கில் 5000 பேர்கள் கோர்ட் மார்ஷல்செய்யப்பட்டனர். கைதான பெண் வீரர்கள் ஊர்மிளாவும், அனுபா சென்னும் உடல் சித்திரவதைக்கு உள்ளாக்கப்பட்டு சுடப்பட்டனர். இந்த பெண் வீரர்கள் பற்றியோ அவர்களுக்கு நேர்ந்த கொடுமைக்கு நியாயம் வேண்டியோ தொடர்ந்த தகவல் ஏதுமில்லை.

கைதான பல வீரர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டு பின்னர் விடுவிக்கப்பட்டனர். விடுவிக்கப்பட்ட பானிபூஷன் பட்டாசார்யாவிற்கு பெற்றோர்கள் திருமணம் செய்விக்கின்றனர். ஆனால் அவர் நவம்பர் 1945ல் வெளியேறி ஆப்தே என்கிற பெயரில் தல்வார் கப்பல் பணியில் சேர்ந்துவிடுகிறார்.

கமாண்டர் எஃப் எம் கிங் பேச்சு பிப்ரவரி 18 அன்று கோபத்தை கிளறியது. அவரும் உடன் இருந்த Flag Officerம் கெரோ செய்யப்பட்டனர். Food boycott முழக்கம் எழுந்தது. யூனியன் ஜாக் கொடி இறக்கப்பட்டு அவ்விடத்தில் மூவர்ணக்கொடி, சிகப்புக்கொடி ஏற்றப்பட்டது. இங்கு ராய் சக்ரவர்த்தி பதிவில் லீக் கொடி சொல்லப்படவில்லை. 'பிரி பிரஸ் ஜர்னல்' இப்போராட்டம் குறித்த செய்திகளை வெளியிட்டது. செய்தி அறிந்த பிரிட்டிஷ் இராணுவம் தல்வார் நோக்கி சுடத்துவங்கியது. மக்கள் தெருவில் திரண்டு நிலைமைகளை கடுமையாக்கினர். தாரவி பகுதியிலிருந்து மக்கள் பிளாஸ்டிக் பைகளை கட்டிக்கொண்டு தல்வார் நோக்கிச் சென்று உணவைக் கொடுத்து வந்தனர்.

பிப்ரவரி 21 அன்று கடுமையான துப்பாக்கி சூடு துவங்கியபோது மைக்கில் போராட்டத்தலைவர்கள் மராத்தா வீரர்களுக்கு தங்கள் வேண்டுகோளை விடுத்தனர். மராத்தா வீரர்களும் பிரிட்டிஷ் அதிகாரிகளின்

ஆணையை புறக்கணித்தனர். கூர்கா பிரிவினரும் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு ஏமாற்றத்தை அளித்தனர். சிறு கடைகள் உட்பட பலர் ஹர்த்தால் செய்து ஆதரவை தெரிவித்தனர். பம்பாய் தெருக்களில் தொழிலாளர், மாணவர், பொதுமக்கள் என திரண்டதும், சில பிரிட்டிஷ் கடைகள் கொளுத்தப்பட்டதும் அட்மிரல் காட்ஃப்ரே தீவிர நடவடிக்கையில் இறங்க அவரை நிர்பந்தித்தன. 300 டாங்குகள் வரவழைக்கப்பட்டன.

பம்பாய் கவர்னர் அனுப்பிய அறிக்கைப்படி 228 பேர் கொல்லப்பட்டனர்- 1046 பேர்களுக்கு காயம் ஏற்பட்டது. ராய் சக்ரவர்த்தியும் காங்கிரஸ்- முஸ்லீம் லீக்- கம்யூனிஸ்ட் கட்சியினர் எடுத்த நிலைப்பாட்டை தனது கட்டுரையில் விளக்கிச் செல்கிறார். தங்களுக்கு ஏற்படுத்தப்பட்ட துரோகம் குறித்து தத் சொன்ன வரிகளை ராய் தந்துள்ளார். அவ்வரிகள்

Faced with such a huge betrayal, Dutt later wrote, “We had planned to channelise the unrest towards a revolt against foreign rule, but we lost. We failed to take the insurrection we started towards its logical culmination. We cried like children, but the tears could not douse the flame of protest in our eyes.” ராய் சௌத்ரி அவர்கள் பி டி அய் நிறுவனத்திற்காக இராணுவம் தொடர்பான செய்தி கட்டுரைகளை எழுதி வந்தவர்.

பிரமோத் கபூர் என்பாரும் இது குறித்து விரிவான கட்டுரை ஒன்றை எழுதியிருக்கிறார். அவர் இப்போராட்டம் தொடர்பாக எழுதிவருபவர். கபூர் பதிவில் காங்- லீக்- கம்யூனிஸ்ட் மூன்று கொடிகளும் ஏற்றப்பட்டதைச் சொல்கிறார். பிரிட்டிஷ் அதிகாரிகள் கேட்வே ஆப் இந்தியா, தாஜ் ஹோட்டல், யாச்ட் கிளப் தகர்க்கப்பட்டுவிடுமோ என அஞ்சியதாக பிரமோத் எழுதுகிறார். சரணடையாவிட்டால் கடும் விளைவுகள் என எச்சரிக்கப்பட்டு உள்ளே தண்ணீர், மின்சாரம் நிறுத்தப்பட்டது என்பதையும் கபூர் குறிப்பிட்டுள்ளார்.

சுனிதி குமார் கோஷ் காங்கிரஸ் தலைமை துரோகம் செய்ததாக எழுதுகிறார். சர்தார் படேல், ஆசாத், பம்பாயின் எஸ் கே பாட்டில் ஆகிய தலைவர்களும் ஜின்னாவும் சரணடைய வற்புறுத்தினர். பிப்ரவரி 26 அன்று பம்பாய் பொதுக்கூட்டத்தில் நேருவும், படேலும் இந்த கலகத்தை கண்டித்து உரையாற்றினர். பத்திரிகையாளர் சந்திப்பிலும் கடற்படைவீரர்கள்

தொழிலாளர்களை வேலைநிறுத்த அழைப்புக்கொடுத்ததை ஏற்கவியலாது என நேரு தெரிவித்தார்.

இந்தப்போராட்டம் ஏகாதிபத்திய அடித்தளத்தை உலுக்கியதாகவே கம்யூனிஸ்ட்களின் பதிவுகள் அப்போது இருந்தன. இந்தப் போராட்டம்தான் விடுதலை மாற்றத்தை உறுதிப்படுத்தியதாகவும் அவர்கள் எழுதினர். ஆங்கிலேயர் இது போன்ற கிளர்ச்சி வந்துவிடும் என அச்சத்துடன் இருந்ததாகவும் அவர்களது குறிப்புகள் இருக்கின்றன.

தல்வார் சமிக்ஞை பயிற்சி பள்ளியிலிருந்த வீரர்களுக்கு ஐ என் ஏ வழக்கு குறித்த செய்திகள் சென்றன. இந்தியா வெல்க, இந்தியாவை விட்டு வெளியேறு என அக்கப்பலில் அவ்வீரர்கள் எழுதத் துவங்கினர். பாசிச சக்திகள் சோவியத்தால் முறியடிக்கப்பட்ட நம்பிக்கையில் நாடு முழுவதும் புரட்சிகர சூழல் நிலவியதாகவும்- கம்யூனிஸ்ட் தலைமை எழுதியுள்ளனர்.

போராட்டக்களத்தில் வீரர்களுள் ஒருவரான போஸ் தனது கமிட்டியில் நிலவிய கருத்துவேறுபாட்டையும் தனது புத்தகத்தில் சொல்கிறார். போராட்டக்கமிட்டி செய்த தவறால் உணவு பற்றாக்குறையுடன், சுற்றிலுமான காவல் அதிகரிக்கலானது என்கிற பதிவை போஸ் எழுதுகிறார்.. ஒரு கட்டத்தில் தல்வாரிலிருந்து போராட்டக்கட்டுப்பாட்டை நர்புதா கப்பலுக்கு மாற்றவேண்டியதானது. பிப்ரவரி 21 அன்று வியாழக்கிழமை castle Barracksல் கிருஷ்ணன் என்பவர் தன் உயிரைத்துறந்து தியாகியானார். 29 வீரர்கள் துப்பாக்கி தாக்குதல் செய்யும் நிலையில் இருந்தாலும் தாக்குப்பிடிக்கமுடியாமல் சரண்டர் ஆயினர். இதில் 40 வீரர்கள் படுகாயமடைந்தனர் என போஸ் சொல்கிறார்.

கராச்சியில் ஹிந்துஸ்தான் கப்பலில் இருபக்க தாக்குதல் நடந்தது. துப்பாக்கி சூடு தொடர்ந்து நடந்திருந்தால் போஸ் போன்றவர்கள் இருந்த கப்பல் முழுமையாக தீக்கிரையாக்கப்பட்டிருக்கும் . காயமடைந்த போஸ் உட்பட பலர் மலிர் போர்க்கைதிகள் முகாமிற்கு அழைத்து செல்லப்பட்டனர். சிகிட்சை முகாமில்தான் கொடுக்கப்பட்டது. போஸ் இடத்திற்கு வந்த லெப்டினெண்ட் பிரவுன் என்பார் பிப்ரவரி 23 அன்று இறந்தவர்களுக்கு இறுதி சடங்கு செய்யப்போகிறாயா இல்லை இடுகாட்டிற்கு போக

விழைகிறாயா எனக்கேட்டதை போஸ் சொல்கிறார். பின்னர் அவர் funeral vans நிறுத்தப்பட்ட பகுதிக்கு அழைத்துச் செல்லப்படுகிறார். அந்த அறிமுகமில்லாத வீரர்களுக்கான இறுதி சடங்கை என்னை வைத்து முடித்தனர் என்கிறார் போஸ். வேலை முடிந்தவுடன் போஸ் மிலி முகாமில் அடைக்கப்பட்டார். போஸ் பிப்ரவரி 22, 1946ல் casualities பற்றி தான் அறிந்த தகவலை தருகிறார். அதன்படி கொல்லப்பட்ட பிரிட்டிஷார் 200, இந்தியர் 1- காயமடைந்த பிரிட்டிஷார் 213, இந்தியர் 13 -சிவிலியன்களில் 70 இறப்பு.

எச் என் பானர்ஜி தனது பகதூர் கப்பல் நினைவுகளை சொல்லும்போது ஆயிரம் ‘பாய்ஸ்’ ஆயுத கிடங்கிற்கு சென்று சமக் கப்பல் ‘adult sailors’ வசம் அவற்றைக் கொடுத்தனர். அவர்களும் துப்பாக்கி தாக்குதலில் இறங்கினர். சரணடைந்த பின்னர் அவர்களும் மலிர் முகாமிற்கு அழைத்து செல்லப்பட்டனர். பானர்ஜி அப்போது 15 வயது பையன்.

வி கே சிங் அவர்கள் எழுதிய புத்தகமான contribution of the armed Forces in Freedom struggle என்பதும் ரின் எழுச்சி குறித்து பேசுகிறது. இரண்டாம் உலகப்போர் முடிவில் நேவியின் பெரும்பகுதி பம்பாயிலும், சிறிய பகுதி கராச்சி, மதராஸ், கல்கத்தா, விசாகப்பட்டினம், கொச்சினிலும் நிறுத்தப்பட்டது. பம்பாயில் ரின் நேவி டிப்போ இருந்தது. அங்கு castle Barracks, Hostilities Only H O, Central communication Office CCO இயங்கின. கொலாபா தான் சிக்னல் டிராஃபிக் மய்யம். HMIS Talwar, the training school for communication ratings - shore Establishment என துறை சார்ந்த விவரங்களை விகே சிங் தருகிறார்.

பிப்ரவரி 17 அன்று மோசமான உணவை எடுத்துக்கொள்ள மறுத்த நிகழ்வு, பணி அதிகாரி அங்கிருந்து அதை அறிந்துகொண்டும் மேலிடத்திற்கு தெரிவிக்காமை, பட்டினியுடன் ரேட்டிங்க்ஸ் அமைதியாகவே சென்ற நிலையை சிங் சொல்கிறார்..

அடுத்தநாள் ஏராள வீரர்கள் மிகுதியாக திரண்டு காலை உணவை புறக்கணித்தது, வந்த அதிகாரி கிங் தான் உணவு எடுத்துக்கொண்டுவிட்டு எந்த நிவர்த்தியும் காணாதது, வீரர்கள் ‘பரேடை’ மறுத்தது , நிலைமை எல்லை மீறி போவது குறித்து Flag Officer பார்வைக்கு சென்றது என சிங்கும் பதிவுகளை கால வரிசையில் அடுக்கியுள்ளார்.

மதியம் ரேர் அட்மிரல் ராட்ரே அவர்கள் செய்த சமரச முயற்சி நடந்தது. மீண்டும் நிலைமை மோசமானதை தொடர்ந்து மாலை வந்து அவர் பேசுகிறார். அவர்தான் பிரதிநிதிகளை அனுப்புங்கள்- நாளை பேசலாம் என்கிறார். கிங் மாற்றப்பட்டு இனிகோ ஜோன்ஸ் என்பவர் அதிகாரியாக வந்தார். அவரும் இந்திய எதிர்ப்பு மனப்பாங்கு கொண்டவர் என்ற கருத்து நிலவியது. இது எரியும் தீயில் எண்ணெய் என்றே மேஜர் ஜெனரல் சிங் பதிவு சொல்கிறது. சிங் பதிவின்படி கொடுக்கப்பட்ட கோரிக்கை பட்டியல் 14 அம்சங்களாக செல்வதைக் காண்கிறோம். சிங் எழுதுகிறார் :

The ratings handed over to Rattray a list of 14 demands, as given below:

1. No victimisation.
2. release of RK Singh, who had been detained earlier.
3. Speeding up demobilisation.
4. Action against Commander King.
5. Improvement in the standard of food.
6. Indian ratings to be given the same scale of pay and allowances as personnel of the Royal Navy, along with access to NAAFI canteens.
7. Kit not to be taken back at the time of release.
8. Grant of higher terminal benefits on release.
9. Good behaviour by officers towards ratings.
10. Regular promotion of lower deck personnel as officers.
11. Appointment of a new commanding officer.
12. Immediate release of INA prisoners and Captain Rashid, who had been sentenced to rigorous imprisonment.
13. Enquiry into incidents of firing on public all over India.
14. Withdrawal of Indian troops from Indonesia and Middle East

தொடர்ந்து மற்ற பதிவுகளைப் போலவே சிங்கும் இரு பக்க தாக்குதல், பம்பாய் நகர எழுச்சி, சாவு- காயம், தலைவர்கள் அறிவுரை, சரண்டர் ,பழிவாங்கல், காலம் கடந்து அவர்களில் சிலருக்காவது பென்ஷன் தீர்ந்தது குறித்து பேசுகிறார்.

# 3. அரசியல் தலைவர்களும் போராட்டமும்

குவிட் இந்தியா போராட்டத்திலேயே புகழ் வாய்ந்த அருணா ஆசப் அலிதான் ரின் போராட்டத்தில் அரசியல் தலைவர்களின் மௌனத்தைக் கலைத்தார். பல முன்னாள் இராணுவத்தினர்களுடன் அவர் தொடர்புகொண்டார். மரின் டிரைவ் பகுதி குடியிருப்பொன்றில் குசும்- பி என் நாயர் ஆகியோர் உதவியுடன் எப்படி ஆதரவை கூட்ட இயலும் என்பதை அருணா ஆலோசித்தார். தல்வார் கப்பலுக்கு வந்து அவர் உரையாற்ற முடிவானது. ஆனால் சொல்லப்பட்ட தினத்தில் அவர் செல்லவில்லை. காங்கிரஸ்- லீக் உட்பட கட்சிகள் முழுஆதரவு தரவேண்டும் என வேண்டுகோள் விடுத்தார்.

காங்கிரஸ் தலைவரான ஆசாத் அவர்கள் கீழ்கண்ட அறிக்கையை தந்ததாக பிரமோத் கபூர் குறிப்பிடுகிறார். அவரது கட்டுரையில் அரசியல் தலைவர்கள் செயல்கள் ஓரளவிற்கு பதிவாகியுள்ளன.

Maulana Azad, then Congress president, issued a statement saying: 'India is not in a mood to tolerate any action that may even have the semblance of the suppression of the national spirit in any quarters,' while adding: 'The unexpected RIN strike has led to a sequel which has assumed distressing proportion...I am in contact with the authorities and I am seeking a prompt and practical termination of the strike.'

படேல் பிப்ரவரி 19ல் அறிக்கை விட்டதை கீழ்கண்ட வரிகளில் பிரமோத் தருகிறார்.

On February 19th, Sardar Patel issued a statement. He had been in consultation with the governor of Bombay, John Colville, and with Asaf Ali in Delhi who had been in close touch with Auchinleck. He advised the naval ratings to be patient and peaceful and urged citizens to maintain strict discipline. The Congress, he said, was working towards a "peaceful settlement".

காந்தி பிப்ரவரி 18 அன்றுதான் வார்தாவிலிருந்து பம்பாய் வருகிறார்.

படேல் உட்பட ஏராளமானவர் திரண்டு அவரை வரவேற்கின்றனர். இரு நாட்களுக்கும் அவர் கடுமையான வேலை நிர்ப்பந்தத்தில் இருக்க வேண்டிய சூழல் இருந்தது. அவருக்கு கப்பற்படை எழுச்சி குறித்து முழுமையான தகவல் சொல்லப்படவில்லை என பிரமோத் எழுதுகிறார். அன்று மாலை பிரார்த்தனை கூட்டத்தில் He asked the people not to 'divert from the path of peace. What was the good of throwing stones at the British? ...Freedom can only be achieved through truth and non-violence...' என தெரிவித்தார்.

பிப்ரவரி 19 மாலையே காந்தியடிகள் புனா சென்றுவிடுகிறார். நிலைமை முற்றுவதை உணர்ந்த அருணா ஆசப் அலி புனே சென்று காந்தியை சந்திக்கிறார். இரண்டு மணிநேரம் அச்சந்திப்பு நடந்தது. இந்து முஸ்லீம் ஒற்றுமை என அவரிடம் தெரிவித்தபோது A combination between Hindus and Muslims and others for the purpose of violent action is unholy and will lead to and probably is a preparation for mutual violence–**ad for India and the world என்றார்.

காந்தியடிகள் அறிக்கை புனே நகரிலிருந்து பிப்ரவரி 23 அன்று வெளியானது. அவ்வறிக்கை ஹரிஜன் இதழில் மார்ச் 3 அன்று வெளியிடப்பட்டிருந்தது. நேவியில் நடந்ததை அகிம்சை வழி என ஏற்கமுடியாது. ஒருவரே ஆனாலும் அவரை ஜெய்ஹிந்த் எனச் சொல் என்று கட்டாயப்படுத்துவதும், 'சர்ச்' எரிப்பதும், டிராம்களை சேதப்படுத்துவதும், அய்ரோப்பியர்களை துன்பப்படுத்துவதும் சுயராஜ்ய மார்க்கமாகாது.

பிரிட்டிஷ் தாங்கள் வெளியேற விரும்புகிறோம்- இந்தியர் ஆட்சி அமைத்துக்கொள்ளலாம் என்று தெரிவித்துவிட்டனர். இப்படி பதட்டமான நிலைமைகளை உருவாக்கி அதை ஒரு நிமிடம் கூட காலதாமதப்படுத்திவிடக்கூடாது என்பது காந்திஜி அறிக்கையின் சாரம்சமாக இருந்தது.

சேவை நிலைமைகள் தங்கள் இந்திய கௌரவத்திற்கு இழுக்கு எனக் கருதினால் ஏன் அங்கு தொடர்ந்து அந்த ஊழியர்கள் பணியாற்றவேண்டும். தங்கள் போராட்டத்தை அகிம்சைவழி என்று சொல்லி அவர்கள் நடத்துவது மோசமான முன்னுதாரணமாக அமைந்துவிடும் எனவும் காந்தி கருதினார்.

காந்தி எழுதியதில் ‘The hypnotism of the INA has cast its spell upon us. Netaji’s name is one to conjure with. His patriotism is second to none...’ (‘How to Canalize Hatred’, Harijan, February 23rd, 1946) என்ற வரிகளையும் காணமுடியும்.

போஸ் எழுதிய புத்தகத்தில் அருணா ஆசப் அலி நேருவிற்கு தல்வார் எழுச்சி குறித்து தெரிவித்தபோது நேரு தனது ஆதரவை தெரிவித்த செய்தியை எழுதியுள்ளார். ஆனால் நேரு பம்பாய் வந்த பின்னர் மற்ற காங்கிரஸ் தலைவர்கள் கருத்தையே எதிரொலித்தார் என்கிறார் போஸ். பம்பாய் பொதுக்கூட்டம் ஒன்றில் பிப்ரவரி 26, 1946 அன்று பேசிய நேரு அவர்கள் வீரர்கள் தெரிவித்த குற்றச்சாட்டுகள், போலீஸ் மற்றும் இராணுவ நடவடிக்கைகள் குறித்து பொதுவிசாரணைக் கோரினார். லோனாவாலாவில் தன்னை சந்தித்த வீரர்களிடம் அகிம்சை வழியை கடைப்பிடிக்க அருணா ஆசப் அலியும் வேண்டிக்கொண்டார்.

இந்த சூழலில்தான் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் பெதிக் லாரன்ஸ் தலைமையிலான கேபினட் மிஷன் அறிவித்தது. இதை கேலி செய்து பார்வார்ட் பிளாக் தலைவர் ஆர் எஸ் ரூய்கர் அறிக்கைவிடுத்தார். அதில் கப்பற்படை புரட்சி மூன்றாவது நாளை எட்டியுள்ள நிலையில் ‘தமாஷாவாக’ மீண்டும் தூதுக்குழு என்கின்றனர். இப்படிப்பட்ட குழுக்களை தொடர்ந்து அனுப்பி இந்தியாவை முட்டாளாக்கும் காலம் முடிவுற்றது. இந்தியாவில் புரட்சிக்கான காலம் கனிந்துள்ளது. காந்தி, நேரு, ஆசாத், ஜின்னா போன்றவர்கள் பிரிட்டிஷ் விளையாட்டை புரிந்துகொள்ளவேண்டும் என ரூய்கர் பேசினார்.

லியாகத் அலிகான் முஸ்லீம் லீக் சார்பில் ஆச்சின்லெக் இராணுவ அதிகாரியை சந்திக்கிறார். பழிவாங்கல் வேண்டாம் என வேண்டுகோள் வைக்கிறார். முஸ்லீம் மாலுமிகளுக்கு பழிவாங்கல் இல்லாமல் செய்ய இயலுமா என பார்ப்பதாக உயர் அதிகாரி ஆச்சின்லெக் உறுதிமொழி அளித்த செய்தியை பிரமோத் சொல்கிறார். லியாகத் தெரிவித்த வரிகள் :

“Mr Jinnah has already assured the RIN men that he will do his best to see that their legitimate grievances are redressed...Quaid-e Azam has made an appeal to the Muslims in particular not to create any trouble and not to play into the hands of those who want to

exploit the situation for their own ends.”

ஜின்னா இப்போராட்டத்தை சுதந்திர போராட்டத்துடன் தொடர்புபடுத்தி பார்க்கவில்லை என்பதையும் பிரமோத் எழுதுகிறார். Jinnah did not really equate the RIN uprising with the struggle for freedom என்பது பிரமோத் தரும் வரி. ஜின்னாவும் அமைதிவழிகளில் போராடியிருக்கவேண்டும் என்றார். முஸ்லீம்களாவது உடன் போராட்டத்தை நிறுத்தவேண்டும் என்று அறிவுறுத்தினார்.

கல்கத்தா அமிர்தபஜார் பத்ரிகா தனது முதல் பக்கத்திலேயே பிப்ரவரி 23, 1946 அன்று ஜின்னா அவர்களின் அறிக்கையை வெளியிட்டிருந்தது. அதில் குறைகள் நியாயமாக இருந்ததால் கடுமையான திருப்பங்கள் நிகழ்ந்துள்ளன. பத்திரிகைகளும் இது குறித்து எழுதியுள்ளன. நாகரிகமுள்ள எந்த அரசாங்கமும் இதில் பாராமுகமாக இருக்கமுடியாது. தனது சேவை அவசியமெனில் தரத்தயார் என ஜின்னா அவர்கள் உறுதி கூறினார். போராட்டக்காரரகள் அரசியல் சட்டபூர்வ வழிகளை மேற்கொள்ளவேண்டும் என்றார். பிரச்னைகள் தீர தன்னால் முடிந்தவற்றை செய்ய ஜின்னா உறுதியளித்தார். தவறானவர் கைகளில் சிக்கிக்கொள்ளவேண்டாம் என எச்சரித்தார். அனைவரும் குறிப்பாக முஸ்லீம்கள் போராட்டத்தை கைவிட வேண்டினார். அவரின் வரிகள் :

I offer my services unreservedly for the cause of RIN men and see that justice is done to them. If adopt constitutional, lawful and peaceful methods and apprise me fully what or what will satisfy them, I give them my assurance that I shall do my best to see that their grievances are redressed.

I appeal to all the RIN men not to play into the hands of those who want to create trouble and to exploit those on strike for their own ends. I urge upon them to restore normal conditions and let us handle the situation which will surely result in their welfare and will be in their best interests. I therefore, appeal to the men of RIN and to the ratings to call off the strike and to the public in general not to add to the difficulties of the situation. Particularly I call upon the Muslims to stop and to create no further trouble until we are in a position to handle this very serious situation. If we fail to make the authorities understand and meet

just demands of RIN men then it will be time for us all with perfect unity amongst ourselves to force the hands of the Government if they are not reasonable. I hope my advice and appeal will not fail. On my return to delhi about 8th of March, I shall take up the question directly with the viceroy and shall do all I can in the matter"

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பம்பாய் கமிட்டி செயலர் வைத்யா, பீப்பிள்ஸ் ஏஜ் எடிட்டர் தோழர் அதிகாரி ஆகியோர் அறிக்கைகளையும் பிரமோத் சொல்கிறார். கம்யூனிஸ்ட் கட்சி பற்றி அடுத்தப் பகுதியில் தனியாக எழுதப்பட்டுள்ளதால் இங்கு பேசப்படவில்லை.

காங்கிரஸ் தலைமை போராட்டத்தை ஒழுங்கு கட்டுப்பாடு மீறல் எனும் பிரச்னையாக பார்த்தது. சரணடைவதே உகந்தது என்ற அறிவுரையை தந்தது. முஸ்லீம் லீகும் அதே நிலைப்பாட்டை எடுத்தது. போராளிகளுக்கோ சுதந்திர போராட்டத்தின் ஒரு பகுதியாகவே தங்கள் எழுச்சியை பார்க்க விழைந்தனர். பழிவாங்கலில்லாமல் கோரிக்கை தீர்வு குறித்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் பேசப்படும் என படேல் உறுதியளித்தார்.

லண்டன் வானொலி பிப்ரவரி 23 அன்று ஒலிபரப்பிய செய்தியை போஸ் தந்துள்ளார். அச்செய்தியில் 63 பேர் இறந்ததாகவும் 800 பேர் காயமடைந்ததாகவும் தெரிவிக்கப்பட்டது. சனிக்கிழமை காலையில் ஆசாத் சி இன் சி ஜெனரல் அச்சின்லெக் அவர்களை சந்தித்துவிட்டு, பழிவாங்கும் நடவடிக்கைகள் இராது என அறிவிக்கிறார். முஸ்லீம் லீக் ஜின்னாவும் தான் உடன் நிற்பதாக தெரிவித்துள்ளார் என்ற செய்தியையும் ஒலிபரப்பியது. வைஸ் அட்மிரல் எச்சரிக்கையான நேவியே அழிந்தாலும் ஒடுக்குவோம் என்பதையும் வானொலி தெரிவித்தது.

லண்டனில் 25 ஆம் தேதி சொல்லப்பட்ட செய்தியில் 270 பேர் இறந்தனர், 1700 காயமுற்றனர் என்பதிருந்தது. திங்கட்கிழமை இந்திய மக்களுக்கு வானொலி செய்தியை சி இன் சி அச்சின்லெக் தரவிருக்கிறார் என்றது அச்செய்தி தொகுப்பு. வைஸ்ராய் லார்ட் வேவல் காங்கிரசின் தலைவர் ஆசாத் அவர்களை சந்திக்கவுள்ளார் எனவும் அச்செய்தி தெரிவித்தது.

API நியுஸ் ஏஜன்சி பிப்ரவரி 24ல் தெரிவித்த செய்தியில் ஆசாத், லியாகத்

இருவரும் தனித்தனியாக சி இன் சியை சந்தித்து பழிவாங்கல் இருக்காது என்று சொன்ன செய்தியை வெளியிட்டது.

Maulana abul kalam azad who had an interview with the C-in-C this morning ( feb 23) told a press correspondent that he had the C-in-C's authority to assure all concerned that there would be no victimisation in connection with the RIN strike, and that all legitimate grievances would be sympathetically examined and redressed.

He added that a calm and peaceful atmosphere was essential for the purpose. Liaquat Ali Kahan of ML had a talk with C-in-C today lasting an hour in connection with the RIN strike. It is learned that the the C-in-C has also assured him that there would be no victimisation of the people involved.

அதேபோல் பிப்ரவரி 26 அன்று ஆசாத் கொடுத்த செய்தியில் போராட்டம் முடிந்து எல்லாவற்றையும் பரிசீலிக்கவேண்டிய சூழலில் போராட்டத்தில் முன்நின்றார்கள் எனச் சொல்லி சிலரை பழிவாங்கக்கூடாது . அது நியாயமில்லை. தேசிய எழுச்சியை ஒடுக்குகிறார்கள் என உணர்வை உருவாக்கும் நடவடிக்கைகள் ஏதும் வேண்டாம் என்ற அறிவுறுத்தலை தந்தார்.

நேருவை பம்பாயில் பிப்ரவரி 27 அன்று போராளிகளில் சிலர் சந்தித்து 45 நிமிடம் உரையாடினர். போராட்டத்தை நிறுத்தியிராவிட்டால் பம்பாய் தெருக்களில் உயிர்ப்பலி பெருகியிருக்கும் என நேரு அப்போது தெரிவித்திருந்தார். தலைவர்கள் தொடர்ந்து போராளிகளை சந்தித்ததும், இராணுவ உயர் அதிகாரிகளிடம் வாக்குறுதிகளை பெற்றதாக தெரிவித்ததும் போராளிகளுக்கு நம்பிக்கையை உருவாக்கின. அவர்களும் சரண் அடைந்தனர். ஆனால் நேவி தலைமை எந்தக் கருணையும் எவர் மீதும் காட்டாமல் முகாம்களில் அடைப்பதையும், அனைத்து பழிவாங்கல் நடவடிக்கையையும் எடுத்தது. எவருக்கும் அப்படி எந்த உறுதிமொழியும் தரமுடியாதென்றே பாதுகாப்பு செயலர் மத்திய சட்டமன்றத்தில் தெரிவித்ததையும் பார்க்கிறோம். மத்திய சட்டமன்ற விவாதங்கள் தனியாக தரப்பட்டுள்ளது.

# 4. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் போராட்டமும்

போராளிகளின் பிரதிநிதிகளுடன் போராட்டக்காலத்தில் உரையாடிய தலைவர்கள் என ஒரு பட்டியலை போஸ் கட்சிவாரியாக தந்துள்ளார்.

காங்கிரஸ்- ஆசாத், அருணா ஆசப் அலி, படேல், நேரு பிறர்

லீக்- ஜின்னா, கஸ்தார்

பார்வார்ட் பிளாக்- ரூய்கர், முகுந்தலால் சர்க்கார்

ஹிந்து மகாசபா- சாவர்க்கர், என் பி காரே

கம்யூனிஸ்ட் கட்சி- டாங்கே, நம்பூதிரிபாட், அதிகாரி, ரணதிவே பிறர்

கட்சிகள் ஆதரவு போராட்டத்திற்கு இருந்ததைப் பற்றி தனது புத்தகத்தில் போஸ் ஏற்றாலும் சிறு விமர்சனத்துடன்தான் அதனை வெளிப்படுத்தியுள்ளார். சிறிய கட்சி என்ற போதிலும் கம்யூனிஸ்ட் கட்சி முழு ஆதரவைத் தந்தது என்றார் போஸ்.

No doubt, the Indian Communists who considered a small party then, both in size and strength in comparision with Congress and Hindu Mahasabha extended their full support to the RIN during and after the mutiny.

காங்கிரஸ்- லீக் தலைவர்கள் அவர்கள் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை என்கிற விமர்சனத்தை வைக்கும் போஸ் கம்யூனிஸ்ட்கள் குறித்தும் விமர்சனத்தை வைத்துள்ளார். அவர்கள் போராளிகளின் உணர்வுகளை தங்கள் குறுகிய கட்சித் தேவைக்காக பயன்படுத்தினார்கள் என்ற குற்றச் சாட்டை அவர் வைத்தார்.

Some parties, including the Communist Party merely sympathised with the mutineers casually whenever they happen to meet one or discuss on the topic or simply exploit the mutineers to meet their narrow party ends which made the issue perhaps more critical and difficult to assess and this dangerous policy of theirs may be attributed to divisions in the rank and files of the party comrades. It is really something like playing with fire balls”

நக்சல் சார்பில் பேசக்கூடியவர்களுக்கு அப்போதிருந்த கம்யூனிஸ்ட் கட்சி முழக்க அளவில் இவர்களுடன் நின்றது என்ற விமர்சனம் இருக்கிறது. அதைத்தவிர பொதுவாக இப்போராட்டத்தில் சி பி அய்யின் பங்கு பாரட்டப்பட்டே இருந்தது. போஸ் அவர்கள் ஏன் இந்த விமர்சனத்தை வைத்தார் என அறியமுடியவில்லை. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை பெயர் சொல்லி குறிப்பிட்ட போஸ் வேறு கட்சிகள் என பெயர் குறிப்பிடாமல் போராளிகள் பெயரில் நிதிதிரட்டிவிட்டு பாதிக்கப்பட்டவர்களுக்கு ஏதும் செய்யவில்லை என பொதுவாக சொல்லி செல்கிறார். ஏன் அக்கட்சிகளின் பெயரை குறிப்பிடாமல் போனார் என்பது கேள்வியாக இருக்கிறது .

Moscow Radio 'Sailors Uprising' பற்றி குறிப்பிட்டதாக போஸ் தனது புத்தகத்தில் தகவல் அளிக்கிறார். அதில் இந்திய மக்கள் காலனிய ஆட்சியிலிருந்து விடுபட்டு புதுவாழ்வு பெற காட்டும் நிகழ்வு என சொல்லப்பட்டது. போராட்டம் ஒடுக்கப்பட்டது எனவும் அச்செய்தி சொல்லியது.

Moscow Radio tonight referred to the Sailors Uprising in India and described it as an indication that people under Colonial Yoke were hungering for new way of life...Latest report say that the uprising has been crushed. But the very fact that it took place at all is eloquent especially if you look at it in connection with general situation in India

மாணவர் இயக்கம் சார்பில் பம்பாயிலிருந்து அதன் துணைச்செயலர் குமாரி சுசீலா மடிமான் வெளியிட்ட அறிக்கையில் மாணவர்கள் போராடும் sailorsக்கு துணையாக நின்று போராடவேண்டும் என வேண்டுகோள் விடுத்தார். அவர்களது கோரிக்கைகள் மிகவும் நியாயமானவை. போராடியவர் எவர் மீதும் பழிவாங்குதல் கூடாது. நாம் நமது நடவடிக்கையாக பிப்ரவரி 22ல் அமைதியான வேலைநிறுத்தம் செய்வோம். காங்கிரஸ், முஸ்லீம் லீக் ஆதரவு மாணவ இயக்கங்கள் ஒத்துழைப்பு தரவேண்டுகிறோம் என்றும் அறிக்கையில் வேண்டியிருந்தனர்.

Documents of The Communist Movement In India வால்யூம் 5 இப்போராட்டம் குறித்த சில ஆவணங்களை தருகிறது. இந்த ஆவண வால்யூம்கள் சி பி எம் கட்சியால் பிரசுரிக்கப்பட்டுள்ளன. For the Final Phase என்கிற ஆவணத்தை 1946 ஆகஸ்டில் மத்திய கமிட்டியின் தீர்மானமாக அன்றிருந்த

ஒன்றுபட்ட கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்டது. அதில் இந்திய புரட்சியின் இன்றைய கட்டத்தில் மக்கள் கடமைகள் என்பது பற்றி அது பேசியது. ஐ என் ஏ போராளிகள் விடுதலைக்கான இயக்கங்கள், கப்பற்படை புரட்சி, மக்களுக்கும் இராணுவ வீரர்களுக்கும் ஏற்பட்ட பிணைப்பு , இராணுவ வீரர்கள் போராட்டத்துடன் தொழிலாளர்கள் வேலைநிறுத்த அலைகள் எல்லாம் சேர்ந்து ஏகாதிபத்தியத்திற்கு இறுதி மணியடிக்கும் புரட்சிகர சூழலை உருவாக்கியுள்ளன என கட்சி மதிப்பிட்டது.

காங்கிரஸ் லீக் தலைமை சமரச பாதை கடைபிடிப்பதால் மக்கள் இந்த இரு பிரிவுகளில் (புரட்சிகர- சமரச) பிரிந்து நிற்கிறார்கள். இந்த கட்சிகள் ஏகாதிபத்தியத்திடம் வகுப்புவாத உணர்ச்சிகளை கிளப்பிவிடுகின்றனர். மக்களிடம் சோர்வை பிளவை உருவாக்குகிறார்கள்.

புதிய சூழலில் கட்சி துணிவாக வெகுஜன போராட்டங்களை நடத்தவேண்டும். மக்களின் போர்க்குணத்தை அதிகரிக்கவேண்டும் என்றது. கீழ்கண்ட முழக்கங்களை கட்சி வைத்தது. குவிட் இந்தியா, அனைத்து அதிகாரங்களும் மக்களுக்கே, வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் அரசமைப்பு அசெம்பிளி. இடைக்கால அரசாங்கம் என்ற பெயரில் அமையும் ஏகாதிபத்திய சதியை கட்சி அம்பலப்படுத்தவேண்டும். இந்த சதியில் கட்சிகள் பலியாகவேண்டாம் என கோருகிறது கம்யூனிஸ்ட் கட்சி. அப்படியே அமைந்தாலும் அவ்வரசாங்கம் ஏகாதிபத்தியத்துடன் சமரசம் எனும் பாதையில் மேலும் சறுக்கி விழாமல் தடுக்க கட்சி போராடும். தொடர்ந்து விவசாயிகள், தொழிலாளர் இன்னும் பலதரப்பட்ட மக்களுக்கான கோரிக்கைப்பட்டியலை மத்திய கமிட்டி முடிவு செய்ததை பார்க்கிறோம்.

பிபிஎச் கம்யூனிஸ்ட் பதிப்பகம் சார்பில் 1954 அக்டோபரில் ஆவணம் ஒன்றை வெளியிட்டனர். The RIN Strike by a Group of victimised RIN Ratings என அப்பிரசுரம் தலைப்பிடப்பட்டிருந்தது. இந்த தொகுப்பிற்கான முன்னுரையை தோழர் இ எம் எஸ் செப்டம்பர் 1954ல் எழுதியிருந்தார். அவர் எழுத்தின் சாரமான செய்திகள் இங்கு தரப்படுகிறது.

பிரிட்டிஷ் அதிகாரிகளால் மிக இகழ்ச்சியாக நடத்தப்பட்ட ஏராள மனிதர்களின் எழுச்சி நடவடிக்கையது. பிரிட்டிஷாரை வெளியேற்றும்

இந்திய விடுதலைப்போரிலிருந்து இந்த எழுச்சியை பிரித்து பார்க்கமுடியாது. சிப்பாய் கலகம் போன்ற ஒன்றாக பார்க்கப்படவேண்டும்.

ஏகாதிபத்திய பிரிட்டிஷ் குறுகிய காலத்திற்குள் இதை ஒடுக்க முடிந்ததற்கு காரணம் இரண்டாம் உலகப்போர் காலத்தில் ஏற்பட்ட பலவீனம். விடுதலைப்போரின் தலைமை பூர்ஷ்வாக்களிடம்- நிலபிரபுக்களிடம் இருந்தது. இந்த ரின் எழுச்சியில் மில்லியன் கணக்கிலான தொழிலாளர், விவசாயிகள், கைவினைஞர்கள், சிறு வியாபாரிகள் மிகுந்த வீரத்துடன் ஆதரவு தெரிவித்து போராடியுள்ளனர். பல இடங்களில் இவர்களுக்கு கம்யூனிஸ்ட் கட்சியும் பிற புரட்சிகர குழுக்களும் தலைமை தாங்கியுள்ளன. இங்கு தோழர் இ எம் எஸ் கட்சி போராடியவர்களுக்கு துணை நின்றது என்பதையும் தாண்டி தலைமை தாங்கியதாக பேசுவதைக்காண்கிறோம்.

பெரும்பாலான மக்கள் பூர்ஷ்வா கட்சிகளான காங்கிரஸ், லீகின் செல்வாக்கில் இருப்பது உண்மையாகும். எனவே தான் அவர்கள் செங்கொடி மட்டும் ஏந்தாமல் மூன்று கொடிகளையும் ஏந்தினர். எழுச்சி காலத்தில் கப்பலில் உயரே பெருமிதத்துடன் செங்கொடி பறந்தது. இது வேறொன்றையும் திசைவழியையும் காட்டியது. பிரிட்டிஷ் எதிர்ப்பு என்பதில் செங்கொடி மட்டுமில்லாமல் காங்கிரஸ்- லீகும் இருந்தது பூர்ஷ்வாக்களின் செல்வாக்கையே காட்டுகிறது. இந்த பலவீனத்தை பிரிட்டிஷார் முழுமையாக பயன்படுத்திக்கொண்டனர்.

பிரித்தாளும் தந்திரமிக்க பிரிட்டிஷ் ஆட்சி தனக்கான பூர்ஷ்வா நிலப்பிரபுத்துவ கூட்டாளியான காங்கிரசைப் பெற்றது. பிரிட்டிஷ் தோட்ட, சுரங்க, வங்கி வர்த்தக முதலாளிகளை தொடமாட்டார்கள் என்கிற நம்பிக்கை பிரிட்டிஷாரிடம் இருக்கிறது. 600 சமஸ்தானாதிபதிகளுக்கும் பாதுகாப்பும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. இந்த அடிப்படையில்தான் ஆட்சி மாற்றம் என்பது பிரிட்டிஷாரால் ஏற்கப்பட்டது.

இந்த உடன்பாட்டில்தான் எந்த எழுச்சியும் புரட்சிகர நிலைமை நோக்கி மக்களை அழைத்துப்போகாதபடி நிறுத்துகிற முனைப்பில் அந்த அரசியல் கட்சிகளை ஈடுபடசெய்தது. ரின் போராட்டத்தில் சர்தார் படேலும் முகமது அலி ஜின்னாவும் இதைத்தான் செய்தார்கள். இவர்களின் அந்த அறிவுரை

மட்டும் கொடுக்கப்படாமல் போய் இருந்தால் நிலைமையே வேறு வடிவம் எடுத்திருக்கும். 1947 அதிகார மாற்றமும் வேறுவகைப்பட்டு இருந்திருக்கும் என்ற தனது கணிப்பை இ எம் எஸ் வைக்கிறார்.

பிபிஎச் தொகுப்பின் மகத்துவம் பற்றி இ எம் எஸ் புகழ்ந்து எழுதுகிறார். காங்கிரஸ்- லீகின் துரோகம் அதில் தெரியும் என்கிறார். நேருவின் வெளிநாட்டுக்கொள்கையை காம்ன்வெல்த் உடன் நிற்கும்வரை பாரட்டமுடியாது என்கிற விமர்சனத்தை வைக்கிறார். அவரது முன்னுரை இந்த வரிகளுடன் முடிகிறது.

..all those who carry on such a struggle for the real and genuine independence and sovereignty of India and Pakistan will take inspiration from the story of the heroic deeds of the RIN Ratings given in this volume.

இந்த தொகுப்பு குறித்து பப்ளிஷர் குறிப்பில் ரின் எழுச்சிமுடிந்து ஓராண்டில் இந்த கையெழுத்துப்பிரதிகள் எங்களிடம் தரப்பட்டன. பல்வேறு காரணங்களால் உடனடியாக புத்தகம் கொணரமுடியவில்லை. ஆசிரியர் குறிப்புகளில் சரிசெய்த சிலவற்றைத் தவிர வேறு அனைத்தையும் மாற்றமின்றி கொண்டு வந்துள்ளோம் எனக் குறிப்பிட்டுள்ளனர்.

இந்த தொகுப்பிற்கு நீண்ட அறிமுகவுரை எழுதப்பட்டுள்ளது. எவர் எழுதினார் என போடவில்லை. இரு முக்கிய கருதுகோளை எடுத்தவுடன் அறிமுகம் பேசுகிறது. இந்திய சுதந்திரப்போராட்டத்தை இந்திய இராணுவத்தினரை கொண்டு ஒடுக்கலாம் என்ற காலம் முடிவிற்கு வந்ததை ரின் எழுச்சி காட்டியது. அதே போல் இராணுவத்தினர் இந்திய மக்களுடன் இரண்டறக் கலந்து மகிழ்ச்சியான இந்தியாவை உருவாக்க போராடுவார்கள் என்பதை அப்போராட்டம் காட்டியது.

ரின் போராட்டம் மகத்தான 5 நாட்கள் எழுச்சியின் வரலாறாகும். பலர் தண்டனை முடிந்து வீடு திரும்பியுள்ளனர். அவர்கள் நெஞ்சுரத்துடன் தங்கள் காவியக் கதையை தெரிவித்துள்ளனர். தேசிய இயக்கத்தில் ரின் எழுச்சியின் முக்கியத்துவம் அறிய நமக்கு அவை உதவும்.

எந்த அரசியல் பின்னணியில் அவ்வெழுச்சி ஏற்பட்டது என்பதை

பரிசீலிக்கவேண்டும். ஆறாண்டு யுத்த கொடுமையான சூழலுக்கு பின்னர் எழுந்த எழுச்சியது.

The Time has now come to measure the gains and losses to learn the lessons and go forward. The story of the RIN strike has a lot to teach us, for it heralded a new period of revoultionary upheaval.

இ எம் எஸ் எழுத்திலும் அறிமுகவுரை எழுதியவரிடத்திலும் மிகை மதிப்பீடுகள் இருக்கின்றன என்றாலும் ரின் போராட்டம் குறித்து தங்களிடம் கிடைக்கப்பெற்ற பலவற்றை கம்யூனிஸ்ட்கள் ஆவணப்படுத்த பொறுப்பெடுத்துக்கொண்டுள்ளனர் என்பது வரலாற்று மாணவர்கள் மெச்சத்தகுந்த அம்சமாகும்.

நேவல் போராட்ட செண்ட்ரல் கமிட்டி அறிக்கையை சுட்டிக்காட்டி அறிமுகவுரையை முடித்துள்ளனர். Our strike has been a historic event in the life of our nation. for the first time the blood of men in the services and the men in the streets flowed together in a common cause. We in the services will never forget this. We know also that you, our brothers and sisters will not forget"

இந்த தொகுப்பில் போராட்டம் புயலாக வீசியது சொல்லப்பட்டுள்ளது. வீரர்கள் இன்குலாப் ஜிந்தாபாத் முழங்கினர். போராளிகள் வைத்த கோரிக்கைகள்- அறிவுறுத்தல்கள் சொல்லப்பட்டுள்ளன. தலைவர்கள் பலமுறை நமது எழுச்சி அகிம்சாபூர்வமானது என்று தெரிவித்தது பதிவாகியுள்ளது. கப்பல் பணியில் அப்பட்டமாக காட்டப்பட்ட இனப்பாகுபாடு , பிரிட்டிஷ் அதிகாரிகளின் அலட்சிய போக்குகள் சொல்லப்பட்டுள்ளன.

அருணா ஆசப் அலியின் ஒத்துழைப்பு முழுமையாக நம்பப்பட்டு அதில் கிடைத்த ஏமாற்றம், போராட்டக்கமிட்டியில் எழுந்த விவாதங்கள்-குறிப்பாக அகிம்சை சரி -நாம் தாக்கப்படும்போது என்ன செய்வது போன்ற கேள்விகள் பதிவாகியுள்ளன.

பிப்ரவரி 20முதல் பிரிட்டிஷாரின் தீவிர ஒடுக்குமுறை தாக்குதல்கள் சொல்லப்பட்டுள்ளன. சமையற்காரர்கள் வேலைநிறுத்தம் செய்துவிட்டு அவசியமெனில் ஆயுதம் ஏந்த தயார் என உறுதிமொழியை

போராட்டக்கரார்களிடம் தந்தனர். அவசியமெனில் எங்களிடம் ஆயுதம் தந்துவிடுங்கள் - போராடுவோம் என ரேட்டிங்க்ஸ் கேட்டதும் சொல்லப்பட்டுள்ளது. மராத்தா காவலர்கள் தங்கள் சொந்த சகோதரரை ஒடுக்கவே அழைத்துவரப்பட்டிருக்கிறோம் என அறிந்தவுடன் ஒத்துழைக்க மறுத்த செய்தியும் இடம் பெற்றுள்ளது.

இப்புத்தகத்தில் அத்தியாயம் 5 In Defence of Freedom எனத் தலைப்பிடப்பட்டு பிப்ரவரி 21 நிகழ்வுகளை பேசுகிறது. சிறைகள் உடைக்கப்பட்டு கைதிகள் விடுவிப்பு, ஆயுதக்கிடங்கில் புகுந்து தற்காப்பிற்கு தேவையான ஆயுதங்களைக்கொண்டு போராடியது விரிவாக சொல்லப்பட்டுள்ளது. இந்தப் பதிவு இவ்வாறு செல்கிறது :

The machine guns were promptly distributed in strategic positions. One was mounted near the Captain’s cabin facing the sea. The second they placed near the hospital, also facing the sea. The third was found to be defective and abondoned. The seamen were called and arms distributed. Some were given rifles, some revolvers and others only hand grenades. They were thus despatched to their posts. On the army side too there was a lot of activity”

இந்த காட்சிகளை கண்முன் நிறுத்திக்கொண்டோமெனில் எப்படி இரு பக்க துப்பாக்கி தாக்குதல் நிகழ்ந்திருக்கும் என்று ஊகிக்கலாம்.

நிதி கருவூலத்தில் இருந்த மூன்று அதிகாரிகளை வீரர்கள் கைதுசெய்து தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்த செய்தியை பார்க்கிறோம். அதிகாரிகள் வீரர்களுக்கு வழங்கிய சில தண்டனைகளை சில அதிகாரிகளுக்கு வீரர்கள் வழங்கி கோபத்தை தணித்துக்கொண்டுள்ளனர்.

இதனிடையில் போராட்டத் தலைவர் கான் கீழ்கண்ட செய்தியை அனைவருக்கும் அனுப்புகிறார். I hope you will be non violent. I am meeting FOB and FOCRIN in Castle Barracks. I shall let you know last decision afterwards. Up to that time you should keep complete silence.

இது தந்திரமா என்கிற சந்தேகம் சில வீரர்களுக்கு இருந்தது. மாலை 5.30 வரை எவரும் வரவில்லை. வெள்ளைக்கொடி ஏந்தி மூவர் வந்து

பேச்சுவார்த்தை நடப்பதாக சொல்லி சென்றனர். அனைத்து கப்பலிலும் cease fire சிக்னல் தரப்பட்டிருந்தது. அதிகாரி காட்ஃப்ரேயின் அணுகுமுறை கடுமையாக இருந்தது. போராட்டக் கமிட்டி காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஆதரவைக்கோரி வேண்டுகோள் விடுத்திருந்தனர்.

பேச்சுவார்த்தை 1 1/2 மணிநேரம் நடந்ததது. அன்று இரவு அமைதியானதாக இருந்தது. நாளை என்னவாகும் என வீரர்கள் உறங்காமல் விவாதித்துக்கொண்டிருந்தனர். எப்படி காட்சிகள் நகர்ந்தன என்பதை திரைப்படம் போல் காட்டுவதை அந்தப் பகுதியை படிக்கக்கூடியவர்கள் உணரமுடியும்.

பிரவரி 22 அன்று கம்யூனிஸ்ட் கட்சி ஹர்த்தால் பொதுவேலை நிறுத்தம் என்றது. பிரிட்டிஷ் அதிகாரியின் ‘சரணடை அல்லது அழிந்து போ’ ஆணவத்தை எதிர்கொள்வோம் என்றனர் கம்யூனிஸ்ட்கள். பிப்ரவரி 22 அன்று தோழர் அதிகாரி ஹர்த்தாலுக்கான அறைகூவலை பீப்பிள்ஸ் ஏஜ் எடிட்டர் எனப்போட்டு வெளியிட்டிருந்தார். பிப்ரவரி 23 அறிக்கையில் அவர் terror Regime என்கிற கடுமையான விமர்சனத்தை முன்வைத்தார். இம்பீரியலிஸ்ட்களின் திமிர் என கண்டித்திருந்தார். பிப்ரவரி 19ல் பம்பாய் கமிட்டி செயலர் டி எஸ் வைத்யா சிறு வெளியீட்டைக் கொணர்ந்தார் . போராட்டக்காரர்களின் கோரிக்கையை அதில் முழுமையாக வெளியிட்டு விளக்கியிருந்தார். தோழர் அதிகாரியின் தலையங்க விமர்சனம் இவ்வாறு குற்றம்சாட்டியது.

‘He [Patel] shed tears over those who died and condemn [sic] “hooliganism”. But he had, however, no single word to say in condemnation of the British military “hooliganism” who had fired indiscriminately and killed hundreds of innocent lives.’ The editorial added: ‘Gandhi ji said that the Hindu Muslim unity achieved in joint violence at the barricades must lead to mutual violence...in saying so he deprecates the glorious Hindu-Muslim unity in resisting the police and the military repression...the fact is that Congress leaders are not thinking in terms of joint struggles and not even in terms of struggle.’ On Nehru, he commented: ‘To say that a slave people shall never take to arms because its guns are not as big as those of the handful of oppressors, would not be a counsel of wisdom but of cowardice.’

சர்தார் படேலோ ஹர்த்தாலுக்கு ஆதரவு தராதீர் என்றார். அமைதி வழியில் பேச்சுவார்த்தை மூலம் தீர்விற்கு காங்கிரஸ் முயற்சிப்பதாக தெரிவித்தார். மத்திய சட்டமன்றத்திலும் பேசுவோம் என்றார். படேல், லீக் தலைவர்களை கான் சென்று சந்தித்தார். அதிகாரி காட்ஃப்ரே Flag Odfficer செய்தி வெளியானது.

மாலை 6 மணிக்கு வீரர்கள் மத்தியில் காங்கிரஸ் லீக் தலைவர்கள் அறிவுரைப்படி ஆயுதங்களை கீழேவைப்பது என்கிற முடிவை கான் தெரிவித்தார். பதட்டம் ஏற்பட்டது. பழிவாங்கல் இராது எனச் சொல்லியுள்ளனர் என கான் அமைதிப்படுத்தினார். I am of opinion that having received this assurance, we should now surrender and lay down our arms. We can rely our leaders to see that justice is done. Do not think we are surrendering to the British. we are surrendering to the people, because the whole nation is with us" என மிக சோர்ந்த தோற்றத்துடன் அவர் தெரிவித்தார். கடுமையான விவாதங்களுக்குப் பின்னர் அனைவருக்கும் நன்றி பாராட்டி பத்திரிகை செய்தி தரப்பட்டது .

ஆயுதப்பகுதிக்கு பொறுப்பானவர்கள் அங்கே வந்தபோது காலியாக இருந்ததை பார்த்தனர். ஆயுதங்கள் முழுமையாக அதிகாரிகளால் அப்புறப்படுத்தப்பட்டு இருந்தன. சரண்டர் எனில் கட்டுப்பாட்டில் இருக்கும் கப்பல்களை ஒப்படைத்துவிட்டு வேலைநிறுத்தம் தொடரலாம் என சிலர் கூறினர். மூன்று மணிநேரம் கடுமையாக விவாதித்துவிட்டோம். காலம் இல்லை. யாராவது தொடர விரும்பினால் வேலைநிறுத்தம் செய்யலாம். ஆனால் சரண்டர் ஆகிற முடிவை எடுக்கிறோம். இத்தருணத்தில்தான் ஜின்னா ஆதரவு செய்தியும் அவர்களிடத்தில் வந்து சேர்ந்தது. அதை கான் படித்தார். அவ்வறிக்கை கைதட்டலுடன் வரவேற்கப்பட்டது. 6 பேர் நீங்கலாக அனைவரும் சரண்டர் முடிவை ஏற்றனர். முடிவை அதிகாரிகளிடம் தெரிவிக்க கான் சென்றார். தீர்மானம் பத்திரிகைகளுக்கும் அனுப்பப்பட்டது. போராட்டக் கமிட்டியில் ஒருவர் எழுந்து என் இதயம் வலிக்கிறது. இதை பையன்களிடம் சொல்லும்போது கனத்த இதயத்துடன் சொல்லவேண்டிவரும் என்றார்.

பிப்ரவரி 24 அன்று கராச்சியில் ரேட்டிங்ஸ் பரேடிற்கு வரவேண்டும்

இல்லையேல் இராணுவத்தினரால் கட்டாயப்படுத்தப்படுவர் என்கிற செய்தி எரிச்சலூட்டியது. ஹிந்துஸ்தான் கப்பலிலும் பதட்டம் நிலவியது. மதராஸ், விசாகப்பட்டினம், கொச்சின், ஜாம்நகர், கல்கத்தா, டெல்லி பகுதிகளில் நடந்த போராட்டம் இந்த புத்தகத்தில் பதிவாகியுள்ளது.

கத்தியவாட் கப்பல் கடலில் இருந்து போராட்டம் அறிந்து ஆதரவாக நிற்பதற்காக எடுத்த முயற்சிகள் தனியாக பேசப்பட்டுள்ளதை காண்கிறோம். அக்கப்பலில் புரட்சிகர கீதங்கள் இசைக்கப்பட்டதாகவும் தெரிவித்துள்ளனர். எங்கும் நிறுத்தாமல் பம்பாய் சென்று போராட்டத்தில் பங்கேற்பது என்கிற முடிவை கடலில் மிதந்துகொண்டே அவர்கள் எடுத்தனர். ஹிந்துஸ்தான் கப்பல் ஆபத்தில் என அறிந்தவுடன் கராச்சி பக்கம் செல்வோம் என முடிவெடுத்தனர். போராட்டம் குறித்து அறிந்தவுடன் சக போராளிகளுடன் போய் நிற்கவேண்டும் என்கிற தவிப்பில் இந்த போராளிகளின் பயணம் இருந்ததைப் பார்க்கிறோம். எனது பெயர் இளமை- எனது வேலை Change மாற்றம்- என் முழக்கம் புரட்சி என்கிற பாடலை அவர்கள் இசைத்தனர்.

நாயக் பூதன் சாகப் என்கிற 22 வயது இளைஞன் குறித்த பதிவு இதில் காணப்படுகிறது. அவர் அதிகாரியிடம் போராட்டக்காலத்தில் எவ்வாறு துணிச்சலுடன் நின்றார் என்பது சொல்லப்படுகிறது. பூதன் இராணுவ விசாரணைக்குள்ளானார். குற்றத்தை ஏற்றுகொண்டு தவறு என வருத்தம் தெரிவிக்க அறிவுறுத்தினர். அந்த விவசாயப்பகுதி இளைஞன் முடியாதென்றார். அவர் எழுப்பிய கேள்வி What! I should beg of mercy from my enemy? இதற்கு அவர் கடுமையான தண்டனையை பெற்று சிறையில் வாடினார். 1954ல் இந்த புத்தகம் வெளிவரும்போது அந்த வீர இளைஞர் பற்றி செய்தி ஏதும் கிடைக்கவில்லை என பப்ளிஷர் குறிப்பு சொல்கிறது. அது பெரும் சோகங்களில் ஒன்று.

ஆயிரக்கணக்கானோர் சிறையில் 48 நாட்கள் வைக்கப்பட்டனர். ஏப்ரல் 16, 1946ல் பலர் விசாரணைக்காக அழைத்துவரப்பட்டனர். கண் துடைப்பு விசாரணைக்குப் பின்னர் பலர் அலிப்பூர் சிறைக்கு அனுப்பப்பட்டனர்.

பிப்ரவரி 21-24 ஆகிய நாட்கள் இந்திய விடுதலைப்போரின் வரலாற்றில் இடம் பெற்றுவிட்டன. மதராஸ், மதுரை கான்பூர் கம்யூனிஸ்ட்

கட்சித்தோழர்கள் எவ்வளவு தூரம் போராளிகளுடன் நின்றனர் என்கிற பதிவும் இதில் இருக்கிறது. முலுந்த் கேம்ப் என்பது பம்பாய் தானா சாலையில் மனித அரவமற்ற பகுதியில் இருந்தது. மிக மோசமான இருப்பு சூழல் கொண்ட முகாமது. அடைக்கப்பட்ட வீரர்கள் கழிப்பறைகளுக்கு நீண்ட வரிசை காத்திருத்தல் என்பது துவங்கி பல துன்பங்களை சந்தித்தனர். உணவில் கல் இல்லாமல் ஒரு நாளும் இல்லை.

நர்பதா கப்பல் சார்ந்த இளைஞன் அஸ்லாம். அவரை விசாரிக்க அழைத்து சென்றனர். உனது வேலைநிறுத்தம் குறித்து சொல் என்றனர். அவர் அஞ்சாமல் As an Indian I participated in the strike which was started by Indian navy. It was my moral as well as national duty to join the strike என்றார். அதிகாரி முழுமையான விவரம் தேவை என்றார். கருப்பு வெள்ளை பாகுபாடு காட்டினீர்கள். எங்கள் இதய நெருப்பு எழுந்தது என்றார் அஸ்லாம்.

போராட்டத்தலைவர் கான் பலநேரங்களில் எதேச்சதிகார முடிவை எடுத்தார் என்கிற விமர்சனம் இருந்தது. கான் தனது புகழ் சரிந்துவிடாமல் இருப்பதில் கவனமாக இருந்தார் என்ற குற்றசாட்டும் எழுந்தது. ஆனால் கானை துப்பாக்கி முனையிதான் இராணுவத்தினர் பிற போராளிகளிடமிருந்து லாரியில் தூக்கிப் போட்டனர். அஸ்லாம் இதைப்பார்த்துதான் இழுத்துப்போட்ட அதிகாரியின் சட்டையை பிடித்து கிழித்தார். நாட் என்ற அந்த அதிகாரி கான் கைது என் முடிவல்ல. எனக்கு உத்தரவு செய்தேன் என்றார்.

கல்யாண் முலுந்த் முகாம்களிலும் பட்டினிப்போர் தொடர்ந்தது. இந்த பதிவும் நம் நெஞ்சை உலுக்கும். கணக்கதிகாரியிடம் சென்ற பலருக்கு உங்களுக்கான நிலுவை என ஏதுமில்லை. கடன்தான் உங்கள் பெயரில் என்ற பதில்தான் கிடைத்தது. கையில் காசு இல்லாமல் கிழிந்த ஆடையுடன் உணவும் இல்லாமல் அவ்வீரர்கள் அலைக்கழிக்கப்பட்டனர். பலரை நேராக ரயில் ஏற்றி ஊருக்கு அனுப்பிவிட்டனர். ஆம் பிரிட்டிஷ் அடக்குமுறை மூலம் ஒழுங்கை நிலநாட்டியதாக பெருமைப்பட்டுக்கொள்ளலாம். ஆனால் உதவி செய்வதாக வாக்கு தந்த அரசியல் தலைவர்கள் எங்கே போனார்கள் என்ற கேள்வியை இப்புத்தகம் கடுமையாக எழுப்பியது. கப்பற்படை வீரமிக்க

போராட்டம் மக்கள் மறதி கிடங்கிற்கு சென்றுவிட்டதா எனக் கேள்வியையும் இந்த புத்தகம் எழுப்பியது.

சி பி அய் சார்பாக இன்னுமொரு முக்கிய ஆவணம் இப்போராட்டம் குறித்து இருக்கிறது. அது பொதுச்செயலர் ஜோஷி விசாரணைக் கமிஷனுக்கு அனுப்பிய ஆவணம். மே 29, 1946 அன்று பி சி ஜோஷி தன் கடிதத்துடன் ரின் விசாரணைக்குழுவிற்கு சி பி அய் சார்பில் மெமோரண்டம் ஒன்றை அனுப்பினார். அதில் விடுதலை இந்தியாவின் சுதந்திரத்தை காப்பதற்காகவாவது ‘சேவை நிலைமைகளை’ நேவியில் சரிசெய்திடவேண்டும் என தெரிவிக்கப்பட்டிருந்தது. வீரர்கள் போராட்ட சூழல், குவிட் இந்தியா- தலைவர்கள் கைது, 1943 பஞ்சம், ஐ என் ஏ விசாரணை என்கிற அரசியல் நிலைமைகள், வீரர்கள் கோரிக்கைகள்- குறைகள், நிவர்த்திக்கான ஏற்பாடுகள், ஊதிய வேறுபாடுகள், கௌரவக்கேடுகள், இனப்பாகுபாடு போன்றவை சுட்டிக்காட்டப்பட்டிருந்தன.

Ratings demobilization க்கு பின்னர் அவர்களுக்கு மாற்றுவேலை கிடைக்கும்வரை அரசாங்க உதவி வேண்டும். மாற்றுவேலைப் பெறுவதற்குரிய பயிற்சி வழங்க வேண்டும். பணியில் தொடருபவர்களுக்கு முழு சிவில் உரிமைகள் வேண்டும். அரசியல் நிகழ்வுகளுக்கு அனுமதி- இல்லையெனில் குறைந்தபட்சம் அவர்கள் விரும்பும் புத்தகம், பத்திரிகைகள் படிக்க உரிமை வேண்டும். அவர்கள் தங்களுக்குள் விவாத கிளப்கள் அமைத்துக்கொள்ள அனுமதிக்கப்படவேண்டும். தேர்தலில் வாக்களிக்கும் உரிமை தரப்படவேண்டும். போராட்டத்தால் வெளியே அனுப்பப்பட்டவர்கள், டிஸ்மிஸ் ஆனவர்கள் அனைவருக்கும் மீண்டும் பணியில் சேர ஒரு வாய்ப்பாவது வேண்டும் போன்ற சிவில் வாழ்வாதார கோரிக்கைகளை பொறுப்புடன் கம்யூனிஸ்ட் கட்சி வைத்ததைக் காண்கிறோம்.

சில அதிகாரிகள் கம்யூனிஸ்ட் கட்சி தூண்டுதலால் போராட்டம் என சாட்சியம் சொல்வது ஆதாரமற்ற குற்றசாட்டு. கட்சி அவ்வாறு தூண்டிவிடவில்லை. ஆனால் போராட்டத்தை முழுமையாக ஆதரித்து நின்றது. இந்தக் கலகம் நடந்திராவிட்டால் குறைகளை அறிய முடிந்திருக்காது. விசாரணைக் கமிட்டியும் இருந்திருக்காது என கட்சி

கருதுகிறது. அதிகாரி காட்ஃப்ரே அச்சுறுத்தல்தான் ஹர்த்தால் அழைப்பை கட்சி விடக் காரணமானது. எங்கள் தலையீட்டால்தான் நேவியின் அழிவு தடுக்கப்பட்டது.

போராட்டமுடிவில் பழிவாங்கல் இராது எனச்சொல்லி ஏமாற்றியது எங்களுக்கு வருத்தத்தை தந்துள்ளது. இப்படி பழிவாங்கலை தடுக்க முடியாத அளவிற்கு நாங்கள் பலவீனர்களாக இருந்தோம். பிற கட்சிகளையும் இதில் எங்களால் சேர்க்க முடியாமல் போனது.

நாங்கள் எங்கள் சகோதரர்களுடன் நின்றதில் பெருமையடைகிறோம். நேவி அழிவை தடுத்ததில், விசாரணைக் கமிட்டி அமைத்ததில் பங்கு செலுத்தியுள்ளோம். எங்களுக்கு அது பெருமையே என அந்த மெமோ பெருமிதத்துடன் செல்கிறது.

மதராசில் போராட்டம் குறித்த- கம்யூனிஸ்ட்கள் குறித்த செய்திகளும் இந்தியன் ரிஜிஸ்டர் ஆவணத்தில் இருக்கிறது. இந்தியன் ரிஜிஸ்தர் பதிவுகள் தனியாக பேசப்பட்டுள்ளது.

# 5. இந்தியன் ரிஜிஸ்டர் 1946 ஆவணத்திலிருந்து

Indian Annual register என்பது கல்கத்தாவிலிருந்து வெளிவந்த ஆண்டு நிகழ்வுகளின் காலவரிசைத் தொகுப்பு ஆவண இதழ். அதன் எடிட்டராக எச் என் மித்ரா இருந்துள்ளார். அவர்களது குழுவினரின் அற்புத அபார உழைப்பிற்கு வரலாற்று மாணவர்கள் தலைவணங்கவேண்டும். அரசியல், வரலாறு, சமூகம், தொழில், கல்வி போன்ற பல்வேறு அம்சங்களின் டைஜஸ்ட்டாக அவர்கள் 1947வரை கொணர்ந்தது காணக்கிடைக்கிறது.

இந்தியா குறித்து பிரிட்டிஷ் நாடாளுமன்றம் பேசிக்கொண்டவைகளையும் இந்த ரிஜிஸ்டர் பதிவு செய்தது. தகவல்களை விடாமல் தேடித்தேடி தரவேண்டும் என்பதில் மித்ரா டீம் பெரும் உழைப்பை நல்கியிருப்பது பிரமிக்கவைக்கிறது. இந்தியாவில் ஒரு பகுதி வேறுஒரு பகுதியைப் பற்றி அறிந்துகொள்ளக் கூட ரிஜிஸ்டர் உதவிகரமாக இருந்தது.

Indian Annual register 1946 vol 1 என்பது ஜனவரி முதல் ஜூன் காலத்திலான அனைத்து இந்திய நிகழ்வுகளையும் பதிவாக கொண்ட ஆவணம். இதை நிர்பேந்திர நாத் மித்ரா அவர்களே எடிட்டராக இருந்து கொணர்ந்துள்ளார். அப்போது வருட சந்தா ரூ 15ல் வந்துள்ளது. இனி கப்பற்படை போராட்டம் குறித்து அதன் பதிவிலிருந்து சில அம்சங்களைக் காண்போம்.

பிப்ரவரி 19 1946 அன்று ஃப்ளோரா பவுண்டன் எனும் நெருக்கடி மிகுந்த பகுதியில் 3000 ரேட்டிங் ஊழியர்கள் பெரும் இடையூறை ஏற்படுத்தினர். சில பிரிட்டிஷ்காரர்கள் தாக்கப்பட்டனர். 4 காவலர்கள் காயமடைந்தனர். அப்பகுதியில் மதியம் 1 மணிக்குத்தான் அமைதி திரும்பியது.

போராளிகள் தல்வார் கப்பல் உள்ளிட்ட கப்பல்களில் மோசமான தரக்குறைவான உணவைத் தருவதாக சொல்லி வேலைநிறுத்தம் செய்தனர். எண்ணிக்கை 20 ஆயிரம் என்றனர்.

அங்கு ஹான்பை சாலையில் அமெரிக்க கொடி எரிக்கப்பட்டது. ஹ்யூசன் எனும் போலீஸ் அதிகாரி காயமுற்று செயிண்ட் ஜார்ஜ் மருத்துவமனையில்

அனுமதிக்கப்பட்டார். அப்பகுதியாக சென்ற கார்கல் மீது கற்கள் வீசப்பட்டன. பிப்ரவரி 20 அன்று பம்பாய் சர்ச்கேட் பகுதி பாதிக்கப்பட்டது. 2000 ரின் போராளிகள் அங்கு கூடியிருந்தனர். மணி 10.15 இருக்கலாம். அவர்கள் அந்தேரியிலிருந்து சர்ச்கேட்வரை ரயிலில் முழக்கமிட்டுக்கொண்டே வந்தனர். கையில் மூவர்ணக் கொடி தாங்கியிருந்தனர். ரயிலில் இருந்த பிரிட்டிஷார் இருவர் தாக்கப்பட்டனர். ரேட்டிங்ஸ் சிலர் முன்வந்து அவர்களை காப்பாற்றினர். சீக்கியர் ஒருவரின் பைக்கை நிறுத்தி பஞ்சர் செய்தனர் போராட்டக்காரர்கள். அடுத்து நடந்த கூட்டத்தில் பேசிய பிரதிநிதி வன்முறை கூடாது அகிம்சை வழியில் போராடவேண்டும் எனப் பேசினார்.

போராட்டத்தலைவர் எம் எஸ் கான் போராட்டக்காரர்களுக்கு ஒழுங்கு அவசியம் எனப் பேசினார். திருத்தப்பட்ட கோரிக்கைகளை ஃப்ளாக் ஆபிசருக்கு அனுப்பியதை கூட்டத்தில் தெரிவித்தனர். கப்பலில் ஜெய்ஹிந்த் எழுதியதால் கைதான தத் அவர்கள் விடுதலை செய்யப்பட்டுள்ளார் என்பதும் சொல்லப்பட்டது. கப்பல் மாலுமிகளை கேவலமாக பேசிய அதிகாரிக்கு மாற்றல் போடப்பட்டு புதிய அதிகாரி அவ்விடத்திற்கு போடப்பட்டார். ஆனால் போராளிகள் இந்திய அதிகாரி ஒருவரை போடவேண்டும் எனக் கோரினர். கப்பல்படை சீருடையில் இருந்த சிலர் அமெரிக்க கொடியை கிழித்து எரித்தனர்.

கல்கத்தாவிலும் போராட்டம் பரவியது. பெஹாலா பகுதியில் 200 வீரர்கள் போராடினர். அவர்கள் ஹூக்ளி கப்பல்படையினர். பம்பாயில் வேன் மூலம் அனைத்து ரேட்டிங் வீரர்களும் Barrack பகுதிக்கு மதியம் 3.30க்குள் திரும்பாவிடில் கைது செய்யப்படுவர் என்ற எச்சரிக்கை தரப்பட்டது. நிர்வாகம் HMIS Talwar Shore establishment கதவுகளை சரியாக 3.30க்கு மூடியது. இராணுவம் சுற்றிலும் நிறுத்தப்பட்டிருந்தது. இரவு 10 மணிக்கு உணவுக்கூடத்திற்கு சென்று சில வீரர்கள் உணவு எடுத்துக்கொண்டனர். தெருவில் கட்டுப்படாமல் இருந்த 40 வீரர்கள் கைது செய்யப்பட்டனர். முன்னதாக வந்தது மராத்தா ரெஜிமெண்ட். தொடர்ந்து விவாதம் செய்துகொண்டிருந்த வீரர்கள் லாரியில் ஏற்றப்பட்டு அவர்கள் இடத்திற்கு கொண்டு செல்லப்பட்டனர். பம்பாய் பகுதிகளில் 6 லாரிகளில் இராணுவம்

ரோந்து பணிகளைப் பார்த்தது.

அத்துமீறி நடந்ததாக சொல்லப்பட்ட வீரர்கள் மீது பகிரங்க விசாரணை நடந்தது. அவர்கள் தந்த வாக்குமூலங்களின்படி பம்பாய் தெருக்களில் நடந்த வன்முறைகளில் ரேட்டிங்ஸ் ஈடுபடவில்லை. சில வீரர்கள் தாங்கள் போராட்டத்திற்கு செல்லும்போது ரிவால்வர் முனையில் மிரட்டப்பட்டதாக குற்றம் சாட்டினர். போராளிகளின் பிரதிநிதி ஒருவர் அமெரிக்க கொடியை கிழித்ததற்காக வருத்தம் தெரிவித்தார். ஆனால் அதில் வீரர்களுக்கு பங்கில்லை என்றார். அவரின் அறிக்கையில் the Central committee regrets the action and assures the Americans that they have as much respect for their flag as they have for their own national Flag.

அன்று மாலையே Admirality Houseல் காட்ஃப்ரே பங்கேற்ற அதிகாரிகளின் கூட்டம் நடந்தது. It was decided to provide Indian Food to the ratings on strike according to the list of menu submitted by them. This decision was communicated to the ratings of the various establishments என்ற செய்தியை பரிமாறிக்கொண்டனர்.

பிப்ரவரி 21 கராச்சியில் கலவரத்தில் 9 பேர் காயமுற்றனர். ஹிந்துஸ்தான் கப்பல் 120 வீரர்கள் போராடினர். மாலை 6 மணிக்குள் திரும்பினால் தண்டனை இருக்காது என அதிகாரிகள் அறிவுறுத்தல் சென்றது.

மதராஸ் ஹார்பரில் 80 வீரர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். அவர்கள் ஜார்ஜ் டவுன், பார்க்டவுன் சிந்தாதிரிப்பேட்டை பகுதிகளில் ஊர்வலம் சென்றனர். ஜெய்ஹிந்த் முழக்கமிட்டனர். கூட்டத்தில் கல் எறிந்ததில் ஒரு அதிகாரி காயமுற்றார். இருவர் கைது செய்யப்பட்டனர். அவர்களின் கோரிக்கைகள் உரிய மட்டத்தில் சொல்லப்படும் என தெரிவித்த பின்னர் அவர்கள் தங்கள் இடத்திற்கு திரும்பினர்.

பம்பாயில் பிப்ரவரி 21 அன்று காலையே கடும் டென்ஷன் நிலவியது. காலை 10 மணிக்கு டவுன்ஹால் பகுதியில் துப்பாக்கி சூட்டை பிரிட்டிஷ் மிலிட்டரி போலீசார் செய்தனர். எவ்வளவு பேர் காயமுற்றனர் என்ற தகவல் உடன் கிடைக்கவில்லை.

பிப்ரவரி 21ல் ஆயுதக்கிடங்கில் நுழைந்து சில வீரர்கள் ஆயுதங்களை

கைப்பற்றினர். பிரிட்டிஷ் மிலிட்டரி போலீஸ் துப்பாக்கி சூடு நடத்தியது. உள்ளிருந்த பல அதிகாரிகள் தாக்குதலுக்கு உள்ளாகி வெளியேறினர். பிரிட்டிஷ் இராணுவம் வந்தது. இரு உணவகங்கள் வீரர்களால் சேதப்படுத்தப்பட்டன. உத்தரவிற்கு பணியாத வீரர்கள் மீது தாக்குதல் நடத்தப்பட்டது. castel Barracks ல் அடிக்கடி துப்பாக்கி சத்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது. முழுமையாக பிரிட்டிஷ் இராணுவம் அப்பகுதியை தங்கள் வசம் எடுத்துக்கொண்டது. சற்று தூரப்பகுதிகளில் வாகன போக்குவரத்துகள் பாதிக்கப்படவில்லை. ஆனால் டவுன்ஹால் பகுதியில் Mint மூடப்பட்டு அதன் தொழிலாளர்கள் வீடுகளுக்கு அனுப்பப்பட்டனர். தல்வார் கப்பலில் 1500 வீரர்கள் தங்கள் பட்டினிப்போரைத் தொடர்ந்தனர். எல்பின்ஸ்டைன் சர்க்கிள் பகுதியில் சென்றுகொண்டிருந்த சிவிலியன் ஒருவர் ‘புல்லட்’ பாய்ந்து இறந்தார்.

மதியம் 12 முதல் 12.30 வரை துப்பாக்கி சூடுகள் நடந்தன. வீரர்கள் கையெறிகுண்டுகளை வீசினர். பிரிட்டிஷ் இராணுவம் ’மெஷின்கன்’களை பயன்படுத்தினர். நிச்சயமாக இறந்தோர் அதிகமாகவே இருப்பர். முக்கால் மைல் தூரத்திற்காவாது துப்பாக்கி வெடித்த சத்தங்கள் கேட்டன.

நள்ளிரவில் கூடிய போராட்ட மத்திய கமிட்டி உண்ணாநோன்பை தொடர்வது என முடிவெடுத்தது. அதேபோல் பம்பாய் நகரில் இருந்த அனைத்து வீரர்களும் அவர்களது இடத்திற்கு உடன் திரும்பவேண்டும் என நேவி நிர்வாகம் அறிவுறுத்தியது. போராட்டக்காரர்களின் முடிவை அறிந்த வைஸ் அட்மிரல் காட்ஃப்ரே தனது எச்சரிக்கையை தந்தார்.

“To continue the struggle is the height of folly when you take into account the overwhelming forces at the disposal of the Govt at this time and which will be used to their utmost even if it means the destruction of the navy which we have been so proud”

அதாவாது போராட்டத்தை ஒடுக்குவதில் உள்ள சக்தியை குறிப்பிட்டுவிட்டு அனைவரும் பெருமிதமாக நினைக்கும் ’நேவி’யின் அழிவே ஆனாலும் அது செய்யப்படும் என அவர் எச்சரித்ததை பார்க்கிறோம்.

பம்பாய் மாகாண காங்கிரஸ் கூடி தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது.

போராட்டத்திற்கு தங்கள் ஆதரவு இருப்பதையும் அதேநேரத்தில் வன்முறை தவிர்த்து அகிம்சைவழி அவர்கள் நிற்கவேண்டும் எனவும் கோரியது. குறைகளை காலதாமதம் ஏதுமின்றி விரைந்து நிவர்த்தி செய்திட அதிகாரிகள் நடவடிக்கை எடுக்க அத்தீர்மானம் வற்புறுத்தியது.

அந்தேரி மரின்டிரைவ் பகுதியில் Personnal ஆயிரம் ஊழியர்கள் போராட்டத்திற்கு ஆதரவாக வேலைநிறுத்தம் செய்தனர். அங்கு லத்திசார்ஜ் செய்யப்பட்டதால் 6 பேர் காயமடைந்தனர். இதைக் கண்டித்து ஊழியர்கள் ஊர்வலம் சென்றனர்.

ரேட்டிங்க்ஸ் மற்றும் பிரிட்டிஷ் இராணுவத்திற்கு இடையிலான 6 மணிநேர இரு பக்க சண்டை மதியம் 2.35க்கு நின்றது. சில வீரர்கள் படேலை அணுகினர். அவர் பம்பாய் கவர்னருடன் பேசினார். சி இன் சியிடம் அமைதியான தீர்வைக்கொணர வேண்டினார். அவசியமெனில் காங்கிரஸ் தீர்வு ஏற்பட துணை நிற்கும் எனத் தெரிவித்தார். அதே நேரத்தில் கட்டுப்பாட்டையும் வலியுறுத்துவோம் என அதிகாரிகளுக்கு உறுதி கூறினார். இதற்கிடையில் மறுநாள் முழு ஹர்த்தால் என செய்தி வந்ததால் படேல் அறிவுறுத்தலில் அகிம்சையை வலியுறுத்தியும் ஹர்த்தால் வேண்டாம் எனவும் மாகாண காங்கிரஸ் அறிக்கை வெளியிட்டது.

காட்ஃப்ரே வானொலி செய்தி நேவியில் ஒழுங்கீனம் பரவுவதை அனுமதிக்க முடியாது என்றது. ஒழுங்கைக் கொணர கடுமையாக நடந்துகொள்வோம். உங்களது குறைகள், குற்றச்சாட்டுகள் முழுமையாக விசாரிக்கப்படும். உள்கமிட்டி ஒன்று உங்களது ஊதியம், அலவன்ஸ், பயணப்படி பற்றி ஆராய்ந்து வருகிறது. அனைவரும் தங்கள் இடத்திற்கு திரும்பவேண்டும். அசம்பாவிதம் ஏதும் நிகழாமல் இருக்கத்தான் தல்வார் பகுதியில் காவலர்கள் நிறுத்தப்பட்டுள்ளனர். அரசாங்கம் வன்முறைக்கு இடம் கொடுக்காது என்பதை அழுத்தமாக சொல்கிறேன் என காட்ஃப்ரே செய்தி எச்சரிக்கை கலந்து வெளியானது.

பிப்ரவரி 21ல் போராளிகள் அறிக்கை வெளியிட்டனர். கடந்த 5 நாட்களாக நாங்கள் அமைதியாக வேலைநிறுத்தம் செய்துவருகிறோம். ஆனால் மிலிட்டரியை அழைத்து அவர்கள் துப்பாக்கி சூடு நடத்தியுள்ளனர்.

இராணுவத்தில் அவர்கள் இந்தியர்களை நம்பவில்லை. இப்போது அந்த அதிகாரி முழுமையான அழிவு என மிரட்டுகிறார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பூட்ஸ் கால்களுக்கு நாங்கள் சரணடையமாட்டோமென தேசபக்த உணர்வுடன் சொல்கிறோம். நமது அரசியல் தலைவர்கள் வரவில்லையெனில் சொன்னதை அந்த அதிகாரி செய்யலாம். நாங்கள் குறிப்பாக காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களை வேண்டுகிறோம். பம்பாயில் இரத்த ஆறு ஓடாமல் துப்பாக்கி சூட்டை நிறுத்தி அதிகாரிகள் எங்களுடன் பேச்சுவார்த்தைக்கு வரச்செய்ய இந்த தலைவர்கள் தங்களால் முடிந்த அனைத்தையும் செய்யவேண்டும்.

சர்தார் படேல் அறிக்கை ஒன்றை வெளியிட்டார். வீரர்களுக்கும் பிரிட்டிஷ் துருப்புகளுக்கும் துரதிருஷ்டவசமாக சண்டை நடந்து டென்ஷன் உருவாகியுள்ளது. துப்பாக்கி சூட்டிற்கான உடனடி காரணம் தெரியவில்லை. காங்கிரஸ் அமைதியான தீர்விற்கு அனைத்து நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது. நேற்றுவரை இணக்கம் உருவாகும் சூழல் இருந்ததையும் அறியவேண்டும். சூழல் மாறியதற்கு யார் பொறுப்பு, எதன்பொருட்டு கோபம் மூண்டு சண்டை நடந்தது தெரியவில்லை. இதையெல்லாம் பற்றி மதிப்பிட இந்தநேரம் உகந்ததாக இல்லை. மக்கள் உடனே சகஜ நிலைக்கு திரும்புவதே நல்லது என்பது அவர் அறிக்கையின் சாரம்.

ஹர்த்தால் தேவையில்லை. கல்லூரிமூடல், மில்கள் மூடல் தேவையில்லை. இருக்கிற சூழ்லை மேம்படுத்த அவை உதவாது.. இந்த கடினமான சூழலிலிருந்து மீட்டிட, அனைத்து குறைகளையும் நிவர்த்திக்க காங்கிரஸ் தனது முயற்சிகளை செய்து வருகிறது. செண்ட்ரல் அசெம்பிளியிலும் அது பேசிவருகிறது. எனவே பொறுமையாக இருந்து அமைதியான தீர்விற்கு உதவவேண்டுகிறேன் என படேல் வேண்டுகோள் விடுத்தார்.

பிப்ரவரி 22ல் மதராசில் 80 வீரர்களும் வேலைக்கு திரும்பினர். அங்கு அமைதி திரும்பியுள்ளது. கமாண்டர் பிங்காம் இந்து பத்திரிகை பேட்டியில் வீரர்கள் இந்தியா வாழ்க, இந்தியாவிற்கு வெற்றி என முழங்கியதில் தவறு ஏதுமில்லை என்றார். அவர்கள் excitementல் இருந்தனர் என்பதால் அதை

பெரிதுபடுத்தக்கூடாதென்றார்.

பிப்ரவரி 23 அன்று காலை 6.30க்கு பம்பாயில் தாங்கள் சரண்டர் ஆகிறோம் என போராளிகள் தெரிவித்தனர். சுத்தமான குடிநீரும் தரமான உணவும் ஏற்பாடு செய்யப்பட்டதாக அதிகாரிகள் தெரிவித்தனர். காங்கிரஸ் தலைவர் அபுல் கலாம் ஆசாத் சி இன் சி சந்திப்பிற்கு பின்னர் (பிப்ரவரி 23) பழிவாங்கல் இருக்காது என்றார். சர்தார் படேலின் அறிவுரையைக் கேட்டு வீரர்கள் போராட்டத்தை நிறுத்திக்கொண்டது குறித்து மகிழ்ச்சியே என்றார்.

லியாகத்கானும் அந்த அதிகாரியை சந்தித்து பெற்ற உறுதிமொழியை தெரிவித்தார். ஜின்னா 23 அன்று தனது வேண்டுகோளை வெளியிட்டார். போராளிகளுக்கு நியாயம் பெற்றிட தனது சேவை இருக்கும் என்றார். I appeal to all the RIN men not to play in the hands of those who want to create trouble and exploit those on strike for their own ends என எச்சரிக்கவும் செய்தார்.

மதராசில் வி வி கிரி, முன்னாள் தொழிலாளர் அமைச்சர், ரயில்வே சங்கத் தலைவர் என்ற வகையில் தனது வேண்டுகோளை முன்வைத்தார். பாரபட்சமின்றி கமிட்டி ஒன்றை அமைத்து முழு விசாரணை வேண்டும் எனக்கோரினார்.

மத்திய சட்டமன்றத்தில் ஆசாப் அலி கொணர்ந்த தீர்மானம் பிப்ரவரி 23 1946 அன்று விவாதங்களுக்குப் பின்னர் நிறைவேறியது. ஆதரவாக 74 வாக்குகளும் எதிராக 40ம் விழுந்தன. பாதுகாப்பு செயலர் பி மாசன் பம்பாய் கராச்சி நிகழ்வுகள் தனி விசாரணைக்கு உட்படுத்தப்படும் என்றார்.

இம்மாதிரியான ஒழுங்கீனம் கட்டுப்பாடுகள் மீறல் மிக ஆபத்தானதாக அமையும் என்றார் அரசு பாதுகாப்பு செயலர். அரசாங்கம் முழுமையாக இதை பரிசீலிக்க இருக்கிறது. குறைகள்- போராட்டம்- நிவாரணம் என அனைத்து குறித்தும் அரசாங்கம் பரிசீலிக்கும். தன்னால் பழிவாங்கலே இருக்காது என்கிற உறுதிமொழியை தரமுடியாது . திரளாக அனைவரும் பழிவாங்கப்படுவார்கள் என்பது இருக்காது. பல வீரர்கள் இளம் வயதினர் தவறாக வழிநடத்தப்பட்டுள்ளனர். At the same time Govt would take into account the present electic atmosphere in the country and as far as the military authorities are con-

cerned they would take the greatest care to avoid anything which might lead to a general deterioration of the feeling. எனவே அரசாங்கத்தை சென்சூர் செய்திடும் ஆசப் அலி தீர்மானத்தை கவனமாக பரிசீலிக்க அவர் வேண்டினார்.

ஆசப் அலி to balme the boys alone for the situation would be rather out of proportion என பதில் தந்தார். அப்துர் ரஹ்மான் சித்திக்வி அதிகாரிகள் இனவேற்றுமையை பின்பற்றியதாகவும் இளம் வயதினரின் துடிப்பை உணரத்தவறிவிட்டதாகவும் பேசினார். அந்த பையன்கள் ஒரே இரவில் பைத்தியம் பிடித்தவர்களாக மாறினார்களா என்ற வினாவை எழுப்பினார். சர்தார் மங்கல் சிங்கும் அப்பட்டமான racial discrimination நிலவிய சூழலில் போராட்டம் உரிமையாகிவிடும் என்றார்.

எம் ஆர் மசானி கடுமையாக அரசாங்கத்தை விமர்சித்தார். இந்த குமுறல் நீடித்த ஒன்றாக இருந்து வெடித்துள்ளது. அவர்களிடம் பாதுகாப்பு உணர்வேயில்லாமல் போயுள்ளது. இன்றுள்ள உங்கள் ரின் சட்டங்களால் குறைகளை போக்கிடமுடியாது. ஏன் பம்பாய் மக்கள் திரண்டு போராடினார்கள் என்பதை அவர் தன் உரையில் விளக்கினார். ஆட்சியிலிருந்து உடன் நீங்கள் வெளியேறுங்கள் என்றார். அவர் கம்யூனிஸ்ட்களையும் விமர்சித்தார். The Communists who called out Bombay workers in defiance of the BPCC were fostered by Govt during war. The communists had turned against the Govt because they had fallen out with their principals in Moscow

பி ஜே கிரிஃப்பத் பேசும்போது எம் ஆர் மசானியுடன் தான் உடன்பட்டாலும் அமைதியான முறையில் பேசிதீர்த்திருக்கவேண்டும் என்றார். தீ கக்கும் உரைகளால் பிரச்னை தீவிரமாக்கப்பட்டது. அரசாங்கம் இது போன்று இனி நிகழாமல் உடனே ஒடுக்ககூடிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். எவரையும் ஹீரோ ஆக்குவது கூடாது. டாக்டர் ஜி வி தேஷ்முக்கும் இனப்பாகுபாடு என்றார். கடைகளை கொள்ளையடித்தது யார்?. அஞ்சலகம் பற்றி எரிந்தபோது அதை தடுக்க அங்கு எந்த போலீசும் ஏன் இல்லை?. அட்மிரல் காட்ஃப்ரேவின் வானொலி உரை நிலைமைகளை மோசமாக்கியது.

லியாகத் அலிகான் பேசும்போது இனப்பாகுபாடுதான் போராட்டமாக வெடித்துள்ளது. குறையை கேட்டு எவரும் தீர்க்க தவறிவிட்டனர். நீங்கள்

மோசமாக நடத்தியதால்தான் அவர்கள் தங்கள் உறக்கம் களைந்து எழுந்தனர். இராணுவத்தில் கட்டுப்பாடு அவசியம் என்பதை ஏற்கிறேன். ஆனால் அதிகாரிகள் திறமையானவர்களாக இருப்பதும் அவசியம். அவர்கள் வீரர்களின் நம்பிக்கையை பெறவேண்டும். எனவே கமிட்டி அனைத்தையும் முழுமையாக ஆய்ந்து தன் முடிவை விரைவில் தரும் என நினைக்கிறேன் என்றார்.

பிப்ரவரி 25 அன்று சி இன் சி நியாயமான அனைத்து குறைகளும் விரைவில் தீர்க்கப்படும். ஆனால் சில மனிதர்கள் ஆசைகள் எல்லாம் நிறைவேறாது என்றார். ஜெனரல் அச்சின்லெக் பேசும்போது அரசியல் புகுந்தது என்பதை ஏற்றார். ஒருசேர பழிவாங்கல் என்பது இராது. ஆனால் முன்நின்று போராடியவர்கள் மீது தனித்தனியான நடவடிக்கைகள் இருக்கும் என்றார். ஆயிரக்கணக்கானவரை பணியில் வைத்திருக்கும் எந்த நிறுவனத்திலும் குறைகள் என்பது இருக்கலாம். ராயல் நேவிக்கும் ராயல் இந்தியன் நேவிக்கும் ஒரே சம்பளம் வேண்டும் என்கிறார்கள். அது சாத்தியமல்ல. உள் கமிட்டி ஒன்று ஊதியம் அலவன்ஸ்கள் குறித்து பரீசீலித்து வருகிறது. அனைவரும் சேர்ந்து நின்று ஒழுங்கை மீறுவது என்பது தீர்விற்கு உதவாது. மிக மோசமான சேவை நிலைமைகள் போன்று சித்தரிப்பது சரியல்ல. அவை sensational ஆக்கப்படுகிறது என்றார்.

பம்பாயில் திரளாக மக்கள் பங்கேற்ற பொதுக்கூட்டத்தில் பிப்ரவரி 26, 1946ல் படேல் உரையாற்றினார். அவரது உரையில் மூன்று நாட்கள் பம்பாய் நகரம் அராஜகத்தை பார்த்தது. அப்பாவிகள் பலியாயினர். அனைவரும் மனசுத்தியுடன் நிகழ்ந்தவற்றை பரீசீலிக்கவேண்டும். கடுமையான குற்றங்களில் ஈடுபட்டவர்கள் தண்டிக்கப்படுவர். 300 பேர்கள் இறந்துள்ளனர். எதற்காக இந்த இழப்புகள். காங்கிரஸ் அரசாங்கத்துடன் அமைதி வழியில் மாற்றங்களை கொணர அனைத்து முயற்சிகளும் எடுத்துவரும்போது இந்த எழுச்சி ஏன்? காங்கிரஸ் தலைமை சரியில்லையெனில் அதை நீக்க மக்களுக்கு உரிமையுண்டு.

படேல் தன் உரையில் கம்யூனிஸ்ட் கட்சியை விமர்சித்தார். The Communist party is giving a wrong lead to the people and trying to exploit their patriotism. They

were doing this for the purpose of resurrecting their own party' s prestige which had suffered in recent years. The CP had wholeheartedly cooperated with the British Imperialism when India had been plunged in the Quit India struggle. That party was to day talking of an anti imperialist struggle. Would anyone take them seriously..All their efforts to rebuild themselves were doomed to failure.. என்ற கடுமையான தாக்குதலை அவரது உரையில் பார்க்கிறோம்.

ஹர்த்தால் என அழைப்புகொடுப்பவர்கள் முட்டாள்களின் உலகத்தில் இருக்கிறார்கள் என்றார் படேல். அதேநேரத்தில் சி இன் சி ஒலிபரப்பு செய்தியையும் படேல் விமர்சித்தார். நீண்டநாட்களாக நிலவும் குறைகளை தீர்க்காதது குறித்து கேள்வி எழுப்பினார்.

பம்பாயில் 26 ஆம்தேதி முழு அமைதி திரும்பியது. நேருவும் அமைதி நீடிக்க வேண்டுகோள் விடுத்தார். அவர் ஜே ஜே மருத்துவமனைக்கு சென்று காயம்பட்டவர்களுக்கு ஆறுதல் தெரிவித்தார். அவர் உரையில் we have all the virtues for winning our freedom but I must confess that we lack the discipline which is essential for a free country"

மதராஸ் மாகாணத்தில் நடந்த நிகழ்வுகளையும் இந்தியன் ரிஜிஸ்டர் சொல்கிறது. பிப்ரவரி 22 அன்று மதுரையில் பாண்டியன் மில் பகுதியில் பதட்டம் நிலவியது. ரங்கசாமி உயர்நிலைப்பள்ளி மீது கல் எறியப்பட்டது. கூட்டம் அங்கிருந்து செயிண்ட்மேரி பள்ளிக்கு சென்று மூடச்சொல்லியது. மதுரை எஸ் பி அவர்கள் நேரிடையாக வந்தார். கூட்டம் கலைக்கப்பட்டது. மாலை 5 மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகம் தாக்கப்பட்டது. கட்சிக்கொடியை பிடுங்கி எறிந்தனர். மாஜிஸ்ட்ரேட் உடன் எஸ் பியும் வந்து நிலைமைகள் சீர் செய்யப்பட்டன.

பிப்ரவரி 25 அன்று கம்யூனிஸ்ட் கட்சி கிளையின் சார்பில் மதராசில் டி ஆர் கணேசன் கையொப்பத்தில் ஹர்த்தால் அறைகூவல் விடப்பட்டது. கம்யூனிஸ்ட் இயக்கம் ஹர்த்தாலில் மாணவர், தொழிலாளர் ஈடுபட்டனர். டிராம்வே, முனிசிபல் தொழிலாளர் பங்கேற்றனர். காலை 11.30க்கு செண்ட்ரல் ஸ்டேஷனில் ஆர்ப்பாட்டம் நடந்தது. ரயில்வே எஸ் பி சிராஜுதீன் காவலர்களுடன் வந்து கூட்டத்தை கலைத்தார். கூட்டம் பீச் சென்று

அங்கிருந்து மாம்பலம் வரை நுழைந்தனர். சில இடங்களில் எலக்ட்ரிக் டிரையினை நிறுத்த முயற்சித்தனர். மூர்மார்கெட் பகுதியில் 10.30 முதல் 12 வரை பதட்டம் இருந்தது. நேப்பியர் பூங்காவரை ஊர்வலம் சென்றனர்.

பின்னி ஆலையிலிருந்து 600 பேர்கள் இந்த நிகழ்வில் பங்கேற்றனர். ஜார்ஜ்டவுன் மூர் மார்க்கெட் கடைகள் மூடப்பட்டன. கூட்டத்தை ஆங்காங்கே போலீசார் கலைத்துக்கொண்டேயிருந்தனர். சைனா பஜார், கொத்தவால் சாவடி, கோவிந்தப்ப நாயக்க தெரு, பந்தர் தெரு, குடோன் தெரு கடைகளும் மூடப்பட்டிருந்தன. பைகிராப்ட்ஸ்ரோடு, திருவல்லிக்கேணி ஹைரோடு பகுதிகளிலும் கடைகள் மூடப்பட்டேயிருந்தன. பள்ளி மாணவர்கள் ஊர்வலத்தில் இருந்தனர். மவுண்ட்ரோடு கடைகள் சாத்தப்பட்டிருந்தன. அய்ரோப்பியரின் ஸ்பென்சர் கூட மூடப்பட்டேயிருந்தது. ஊர்வலப்பகுதியில் இருந்த லாரிகளின் கண்ணாடிகள் உடைக்கப்பட்டிருந்தன. லோகோ பெரம்பூர் ஊழியர்கள் மதியம் வேலைநிறுத்தம் செய்தனர். பிஅண்ட் சி மில் பகுதியில் பல்வேறு பகுதியிலிருந்தும் திரண்ட 15000 தொழிலாளர் மத்தியில் ஜீவானந்தமும் ஏ எஸ் கே அய்யங்காரும் உரையாற்றினர்.

பிப்ரவரி 26 அன்று இந்தோ சிலோன் போட்மெயில் மீது சைதாபேட்டையில் கல் வீசப்பட்டது. போலீசார் தாக்குதலில் மூவர் காயமடைந்தனர். சப் அர்பன் சேவைகள் சிக்னல் பழுதால் நிறுத்தப்பட்டன. சைதாப்பேட்டை மாம்பலம் டிரக் பகுதியில் ‘சிமெண்ட் பிளாக்ஸ்’ போடப்பட்டன. நிறுத்தப்பட்ட ரயில் மீது கற்கள் வீசப்பட்டதால் பிரயாணிகள் தற்காத்துக்கொள்ள ஓடினர். அந்தப் பகுதி மக்கள் உதவியால் அவர்கள் பாதுகாப்புடன் செல்லமுடிந்தது. எஸ் பி தேவசகாயம், கலெக்டர் ராமச்சந்திரன் நிலைமைகளை கட்டுக்குள் கொணர நடவடிக்கைகள் எடுத்தனர். கூட்டத்தாரைக் கலைக்க போலீசார் துப்பாக்கி சூடு நடத்தினர்.

காலை 6.30 முதல் 9.30வரை நிறுத்தப்பட்டிருந்த போட்மெயில் போலீஸ் பாதுகாப்புடன் நகர்ந்தது. ஆர் எம் எஸ் மெயில் பைகள் பத்திரமாக மீட்கப்பட்டன. திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டியும் பாதுகாப்புடன் அழைத்துவரப்பட்டது. ஆயுதபோலீசார் இறக்கப்பட்டனர்.. காவலர்கள் 12 பேரை கைது செய்தனர். தொண்டையார்பேட்டையிலும் கூட்டத்தை கலைக்க

வேண்டியிருந்தது. மொத்தமாக 28 பேர்கள் ராயப்பேட்டை பெஞ்சு கோர்ட்டில் ஆஜர் செய்யப்பட்டனர். கோர்ட் அவர்களுக்கு ரூ 10 அபராதம் அல்லது ஒரு வார சிறை என்றது.

அசோசியேட்டட் பிரஸ் பேட்டியில் காமராஜ் நாடார் ஹர்த்தாலுக்கு காங்கிரஸ் அறைகூவல் விடவில்லை. இப்படிப்பட்ட ஒழுங்கீனமும் சக்தி விரயமும் துன்பம் தேடிக்கொள்ளும் செயல்களே. காங்கிரஸ் அழைப்பின்றி தமிழ்நாட்டு மக்களும் மதராஸ் நகர மக்களும் அவசரப்பட்டு எதிலும் பங்கேற்கவேண்டாம் என காங்கிரஸ் தலைவர் என்ற வகையில் வேண்டுகோள் விடுத்தார். அன்று சிறப்பு நடவடிக்கையாக தெரு விளக்குகளை இரவு 10.30க்கு பின்னரும் அணைக்காமல் எரியவிட கார்ப்பரேஷன் முடிவெடுத்தது.

இப்ராகிம் சாலை வழியாக வேகமாக வந்த மிலிட்டரி லாரி கூட்டம் ஒன்றால் கல் வீசப்பட்ட நிலையில் 14 வயது பையன் தலையில் அவ்வண்டி ஏறி அவர் இறந்தார். மற்றொருவர் கால் துண்டானது. நிறுத்தப்பட்ட சப் அர்பன் ரயில் சேவையை எக்மோர் எஸ் பி யும் காவலர்களும் நேரிடையாக பயணித்து மெதுவாக மாமூல் நிலைக்கு கொணர்ந்தனர். 17 வயது பையன் போர்ட் ஸ்டேஷன் அருகே சுடப்பட்டு கிடந்தது தெரிந்தது. மேலும் காயம்பட்ட இருவர் மருத்துவமனைக்கு எடுத்து செல்லப்பட்டனர்.

மாலை 4 மணிக்கு திருவல்லிக்கேணி பகுதியில் மிலிட்டரி பயன்பாட்டிற்காக இருந்த இரு குடிசைகள் கொளுத்தப்பட்டன. இரு தீயணைப்பு என்ஜின்கள் மூலம் பரவாமல் தடுத்தனர். கவர்னரின் ஆலோசகர்கள் மெரினா சாலைப் பகுதிக்கு சென்று நிலைமைகளை பார்வையிட்டனர். எல்பின்ஸ்டைன் தியேட்டர் அருகில் மிலிட்டரிகாரரர் ஒருவரின் பைக் பெட்ரோல் ஊற்றி கொளுத்தப்பட்டது. மலபார் போலீஸ் இறக்கப்பட்டனர். வெலிங்டன் சினிமா தியேட்டர் பகுதியில் பெண்களுடன் சென்ற நபரை நிறுத்தி ஜெய்ஹிந்த் எனச் சொல்ல கூட்டம் வற்புறுத்தியது.

வி பரமேஸ்வரன் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஹர்த்தாலை வெற்றிகரமாக மாற்றிய அனைவருக்கும் பாராட்டை தெரிவித்தார். பி ராமச்சந்திரன், ஜீவானந்தம் சோமசுந்தரம் கூட்டங்களில் உரையாற்றினர். கம்யூனிஸ்ட்

கட்சி மாநிலச் செயலர் எம் ஆர் வெங்கட்ராமன் ‘இம்பீரியலிஸ்ட்’ எதிர்த்து நடத்திய போராட்டம் பற்றியும் பங்கேற்றமைக்கு நன்றியும் தெரிவித்தார்.

திருச்சியில் வன்னியடி மைதானத்தில் லட்சம் பேர் திரண்ட கூட்டம் நடந்தது. நிகழ்ச்சி மிக அமைதியாக நடைபெற்றது. எம் கல்யாணசுந்தரம், கே பாலதண்டாயுதம் ஆகியோர் ரின் போராட்டம் அவர்களின் கோரிக்கைகள் போலீஸ் அடக்குமுறைகள் குறித்து பேசினர். ஸ்ரீரங்கத்திலிருந்து பேருந்து பணியாளர்கள், பீடி- சிகரெட் தொழிலாளர் ஊர்வலமாக அக்கூட்டத்திற்கு வந்தனர். பெரும்பாலான பள்ளி கல்லூரி மாணவர்கள் பங்கேற்றனர்.

இந்தியன் ரிஜிஸ்டர் பதிவுகள் இப்போராட்டம் குறித்து அறிந்துகொள்ள உதவும் முக்கிய ஆவணங்களில் ஒன்றாக இருப்பதை பதிவுகளை பார்க்கும் நம்மால் உணரமுடியும்.

# 6. சட்டமன்றங்களில் ரின் போராட்ட எதிரொலி

லண்டனில் மக்களவையில் (house of Commons) பிப்ரவரி 21, 1946ல் ஹெண்டர்சன் ஸ்டீவர்ட் ஒத்திவைப்பு தீர்மானத்தை ரின் கலகத்தை சுட்டிக்காட்டிக்கொணர்கிறார். இதற்கு பிரதமர் அட்லி அவர்கள் பதில் அளித்தார். அவரது பதிலில் உறுப்பினர் இப்பிரச்சனையை எழுப்புவது குறித்து அறிவிப்பு ஏதும் இல்லை. தற்போது என்னிடம் எந்த தகவலும் இல்லை. தகவல் கிடைக்கப்பெற்றவுடன் அவைக்கு தெரிவிக்கப்படும் என்றார். ஹெண்டர்சன் தனது குறுகிய அறிவிப்பிற்காக வருத்தம் தெரிவித்தார். தகவல் கிடைத்தவுடன் பிரதமர் அவைக்கு தெரிவிக்கவேண்டினார். அத்துடன் நேவி அட்மிரல் கட்டுப்பாட்டில் இல்லாமல் சி- இன் - சி கட்டுப்பாட்டில் ரின் இருக்கிறது என்பதையும் அந்த உறுப்பினர் ஏற்று தனது தீர்மானத்தை வாபஸ் பெற்றுக்கொண்டார்.

பிரதமர் அட்லி மக்கள் அவையில் இந்திய காங்கிரஸ் இந்த கலகத்தை ஏற்கவில்லை. அந்த இயக்கம் விரைவில் அரசாங்க பொறுப்பு சுமக்க காத்திருக்கிறது. எனவே இந்த ஒழுக்க மீறலை அவர்கள் மன்னிக்க விரும்புவர். ஆனால் இதை பொறுத்துக்கொள்வது அரசிற்கே ஆபத்தானது. The complete responsibilty which has marked the Indian naval outbreak cannot easily be excused, and there will be universal regret for the slur that these misguided men have put upon the magnificient record of the service எனக் கருத்து தெரிவித்தார்.

மக்களவை அதிகாரபூர்வ குறிப்பு பிப்ரவரி 22, 1946ல் பிரதமர் அட்லி அவர்களின் பதில் இடம்பெற்றுள்ளது. தல்வார் கப்பலில் பிப்ரவரி 18ல் பணிமறுத்தவர்கள் பற்றி அட்லி குறிப்பிடுகிறார். அவர்கள் அரசியல் முழக்கங்கள் எழுப்பினர். அரசியல் தலைவர்கள் உள்ளே வந்து தங்களிடம் உரையாடக்கோரினர். பம்பாய் தெருவில் சில ரேட்டிங்ஸ் ரௌடித்தன வன்முறையில் ஈடுபட்டதால் போலீசார் கைது செய்தனர். Flag Officer போராடுபவர்களின் பிரதிநிதிகள் 14 பேரை அழைத்துப் பேசினார். தங்களை அவமரியாதையாக நடத்திய அதிகாரிமீது நடவடிக்கை, நல்ல உணவு, ராயல்

நேவிக்கு இணையாக ராயல் இந்தியன் நேவியிலும் ஊதியம் அலவன்ஸ்கள், கொடுக்கப்பட்டுள்ள 'கிட்'டை பணிவிடை பெறும்போது கேட்கக்கூடாது, கூடுதல் கிராஜூடி, இந்த அனைத்துக் கோரிக்கைகளையும் தாங்கள் சொல்லும் தேசியத் தலைவருடன் பேசி தீர்த்துவைக்கவேண்டும் என்றுதான் பிரதிநிதிகள் கோரினர்.

பிப்ரவரி 20 அன்று பம்பாய் நிலைமை மோசமானது 7000 பேர்கள் போராட்டத்திலிருந்தனர். பிப்ரவரி 21 இரவு நிலைமை கட்டுக்குள் வந்ததாக கவர்னர் தெரிவித்தார். காங்கிரஸ் கட்சி அதிகாரபூர்வமாக கலகம் குறித்து disclaim செய்துள்ளனர். இடதுசாரிகள் தங்கள் பரிவைக் காட்டியுள்ளனர். நிலைமைகள் மேம்படுவதற்கு முன்னர் சில இடையூறுகள் வரலாம்.

கல்லகண் எனும் உறுப்பினர் விரைவில் விசாரணை வேண்டும் என்றார். கண்டிப்பாக விசாரணை நடைபெறும் என்றார் பிரதமர். கீனன் எனும் உறுப்பினர் விசாரணை மூலம் குறைகள் உண்மையா, கற்பனையா என்பதை அறியவேண்டும். விரைவில் விசாரணை முடியவேண்டும் என்றார். மேஜர் மக்பெர்சன் கலகத்தில் அய்ரோப்பிய உயிர்கள் இழப்பு எவ்வளவு என வினவினார். இந்த அவையில் தெரிவித்தவை தவிர வேறு விவரம் என்னிடம் இல்லை என அட்லி பிரதமர் பதிலளித்தார்.

இந்திய மத்திய சட்டமன்றத்தில் காங்கிரசின் துணைத்தலைவராக ஆசப் அலி ஒத்திவைப்பு தீர்மானத்தை கொணர்ந்தார். பிலிப் மாசன் பாதுகாப்பு செயலர் விளக்கம் தரும்போது போராட்டம் முடிவிற்கு வந்துவிடும்- இப்போது அது குறித்து விவாதிப்பது நிலைமைகளை மோசமாக்கிவிடலாம் எனத் தெரிவித்தார். அமைதியான தீர்விற்கு அரசாங்கம் உத்தரவாதம் தரவேண்டும் என ஆசப் அலி கோரினார். திங்கட்கிழமை வரை விவாதம் வேண்டாம் - அனைவரும் வேலைக்கு திரும்பிய பின்னர் முழு விசாரணைக்கு ஏற்பாடு செய்யப்படும் என மாசன் தெரிவித்தார். ஆசப் அலியும் தனது பேச்சில் that India wanted a good fighting machine, but also a patriotic- not a merceneary army. They did not want, ofcourse, the Army forces to be run by party politics.

மினு மசானி மத்திய சட்டமன்றத்தில் இது குறித்து இவ்வாறு கேள்விக்கணைகளை எழுப்பினார்.

Why do the people of Bombay support the mutineers? It is because Indians do not differ. We do not accept your authority. Your law is not law to us. It has not got the consent of the people behind it, that is why when your military or civil law is broken everyone instinctly regards the rebellion with sympathy. In other words, the real cause of the mutiny is the existence of British rule in the country. The ratings who surrendered in the interest of the country were the moral victors of the struggle'

பிப்ரவரி 23 மாலை 3 மணிக்கு பம்பாய், கராச்சி ரின் போராட்டம் குறித்து பாதுகாப்பு செயலர் அறிக்கையை தருவார் என அவைக்கு தலைமைதாங்கிய ஜி வி மாவலங்கர் அறிவித்தார். அதைத்தொடர்ந்து பி மாசன் தனது உரையை தந்தார். அதில் உணவு மோசம் என போராடுகிறார்கள்- டெல்லியில் எங்களுக்கு நல்ல உணவுதான் தரப்படுகிறது நாங்கள் போராடவில்லை என தெரிவித்த வீரர்களும் இருந்தனர் என்றார் மாசன். ஆனாலும் இங்கு விவாதம் நடக்கட்டும். முடிந்தபின் நான் எனது பதிலை தரமுடியும் என்ற ஆலோசனையை அவர் வழங்கினார்.

டி பி கர்மகர் பலி எண்ணிக்கை எவ்வளவு எனக் கேள்வி எழுப்பினார்.

மாசன் அதற்கு முழு விவரம் வரவில்லை. ஆனால் அவை குறைவாக இருக்கலாம். சில அதிகாரிகள் காயம்பட்டுள்ளனர் என்றார்.

அனந்தசயனம் அய்யங்கார்: ஹிந்துஸ்தான் டைம்ஸ் பலி 200 என சொல்வது உண்மையா என்றார். இதேபோல் மனு சுபேதாரும் கேள்வி எழுப்பினார். அதற்கு மாசன் பத்திரிகை செய்திகளுக்கு நான் பொறுப்பல்ல என்றார்.

மோகன்லால் சக்சேனா அட்மிரல் காட்ஃப்ரே ஒலிபரப்பு சரியா என வினவ மாசன் அதை சரி என தெரிவித்தார். அவர் பேசியதில் ஆட்சேபகரமானது நேவியே அழிந்தாலும் என சொல்லப்படுவதுதான். காட்ஃப்ரே சொன்னது அதன் பெருமிதம் தகர்ந்தாலும் என்ற பொருளில்தானே தவிர நேவி கப்பல்களை அழிப்பது என்பதாகாது.

சேத் கோவிந்த் தாஸ் எழுப்பிய கேள்வி கமாண்டர் கிங் அவதூறாக பேசியதைப்பற்றியிருந்தது. அதற்கு மாசன் விசாரணையின்போது

தெரியவரும் என்றார்.

மனு சுபேதார் பையன்களுக்கு உணவு மறுக்கப்பட்டது என்பது உண்மையா என்றார். மாசன் ஆமாம் என ஏற்றார். அவர்கள் ஆயுதங்தாங்கி போராடிக்கொண்டிருக்கும்போது உணவு சப்ளை நிறுத்தப்பட்டது உண்மைதான் என்றார்.

சேத் யூசுப் அப்தூலா ஹரூண் கராச்சி ஹிந்துஸ்தான் வீரர்கள் சரண்டர் ஆன பிறகும் மோசமாக நடத்தப்பட்டனரா எனக் கேட்டார். அவர்களுக்கு உணவு தரப்படவில்லை என்றார். மாசன் தன்னிடம் தகவல் இல்லை, அவர்கள் கொடுமையாக நடத்தப்பட்டிருந்தால் எனது பார்வைக்கு வந்திருக்கும் என்றார். வேலைக்கு திரும்பிய அனைவருக்கும் வழக்கமான ரேஷன் சப்ளை கொடுக்கப்படும் என்றார். டெல்லியிலிருந்துகொண்டு உணவு கொடுப்பது போன்ற உத்தரவுகளை அனுப்பிக்கொண்டிருப்பதில்லை. அங்கு பார்ப்பதற்கு கமாண்டர் இருக்கிறார் என்றார் மாசன்.

சட்டமன்ற தலைவருக்கும் லியாகத் அலிக்கும் இடையில் ஒத்திவைப்பு தீர்மான நடைமுறை குறித்து விவாதம் எழுகிறது. ஆசப் அலி ஒத்திவைப்பு தீர்மானத்தை எடுத்து விவாதிக்கலாம் என்கிறார். நேற்றே விவாதம் நடந்தது. அப்போது லியாகத் இல்லை என்றார் ஆசாப் அலி. நான் அப்போது வானொலி பேட்டியில் இருந்தேன் என்ற தன்னிலை விளக்கத்தை தந்தார் லியாகத்.

மாசன் தனது நீண்ட விளக்கத்தில் இப்படி ஒழுங்கீனமான நடவடிக்கைகளை வேலைநிறுத்தம் என அழுத்தம்கொடுத்து பேசும் போக்கு அவையில் இருப்பதற்காக வருந்தினார். அவை கலகமல்ல- பணியை செய்யமுடியாது என மறுப்பது கலகமல்ல. வேலைநிறுத்தம் பிற பகுதிகளில் நடப்பது போல் இதை புரிந்துகொள்ளக்கூடாது இராணுவத்தில் ஒழுங்கீனம் என்பது வேறுவகைப்பட்ட ஒன்று என புரிந்துகொள்ளப்படவேண்டும். பழிவாங்குதல் இராது என எந்த உத்தரவாதமும் தரமுடியாது என்றார். ..it will be necessary to consider the very electric atmosphere in which we are present என்பதையும் அவர் சுட்டிக்காட்டினார்

ஆசப் அலி, சர்தார் மங்கல் சிங், அப்துர் ரஹ்மான் சித்திக், எம் ஆர் மசானி போன்றவர்கள் அரசாங்கம் கொடுமையாக நடந்ததை கண்டித்தும் நியாயமான குறைகளை போக்கத்தவறியது பற்றியும் நீண்டவுரையாற்றினர். பி ஜே கிரிஃப்த்ஸ் போராளிகளின் ஒழுங்கு கட்டுப்பாடு மீறலை தாக்கிப்பேசினார். இனி இதுபோல் நடக்க அனுமதிக்கக்கூடாதென்றார்.

கிரிஃப்த்ஸ் உரையால் கோபமுற்ற என் ஜி ரங்கா நீங்கள் முதலில் வெளியேறுங்கள் என இடைமறித்தார். கிரிஃப்த்ஸ் எனது வாதங்கள் காதுகேளாதவர் பதில் சொல்ல இயலாதவர்களுக்கும் விழட்டும் என்றார். இதற்கு ரங்கா உங்கள் இதயம் செத்தொழிந்துவிட்டதென்றார்.

திவான் சமன்லால் இந்த உலகில் எங்காவது தேசிய சட்டமன்றம் ஒன்றில் அந்நியர் இப்படி பேசமுடியுமா எனக் கேட்டார். பாகிஸ்தானுக்கு லியாகத் பாதுகாப்பு மந்திரியானால் நிலைமையை அவர் புரிந்துகொள்வார் என கிரிஃப்த்ஸ் தனது பேச்சை நீட்டித்தார். தலைவர் அவரை முடிக்க அறிவுறுத்தினார். இப்படிப்பட்ட ஒழுங்கு பிறழ்வு செய்பவர்களை தேசிய கதாநாயகர் ஆக்காதீர் என்றார் கிரிஃப்த்ஸ்.

லியாகத் அலி அவர்களும் நீண்டவுரைதனை நல்கினார். ஆர்மியில் ஒழுங்கு என்பதில் மாற்றுக் கருத்தில்லை. ஆனால் பொறுப்பான அதிகாரிகளின் நடத்தை குறித்தும் பேசவேண்டாமா?. பொதுமக்களின் உணர்வுகளுக்கு அரசாங்கம் மதிப்பளிக்கவேண்டாமா? மனிதர்களை வழிநடத்த வேண்டிய பொறுப்பில் உள்ளோர் அம்மனிதர்களின் உணர்வுகளை கணக்கில் கொள்ள வேண்டாமா? அவர்களது நியாயமான குறைகளை சரி செய்திருக்கவேண்டாமா என்ற கேள்விகளை எழுப்பினார்.

மாசன் தன் பதிலில் விசாரணை முடியும்வரை பொறுத்திருக்க வேண்டினார். அனைத்து வேறுபாடுகளையும் பாரபட்சங்களையும் அரசாங்கம் தலையிட்டு தீர்க்கவே விரும்புகிறது. பின்னர் ஆசப் அலி முன்மொழிந்த தீர்மானம் வாக்கிற்கு விடப்பட்டு 74 வாக்குகள் பெற்று நிறைவேறியது. எதிராக வாக்களித்தவர்கள் 40 உறுப்பினர்கள்.

ஆதரவாக வாக்களித்தவர்களில் (அதாவது அரசாங்கத்தை எதிர்த்து)

முக்கியமானவர்கள் ஆசப் அலி, லியாகத் அலிகான், மாளவியா, தேஷ்முக், ரங்கா, அனந்தசயனம் அய்யங்கார், சரத் சந்திர போஸ், மனிபென் கரா,பிரகாசா போன்றோர் இருந்தனர். எதிராக வாக்களித்தவர்கள் ( அதாவது அரசாங்கத்திற்கு ஆதரவாக நின்றவர்கள்) பெயரில் முதல் பெயராக பதிவாகியிருப்பது டாக்டர் அம்பேத்கர் பெயராக இருக்கிறது. அவர் வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக இருந்தார். மாசன், பிராங்க் அந்தோணி,கிரிஃப்தஸ் எஸ் சி ஜோஷி, ஆர் என் பானர்ஜி போன்ற பெயர்களை பார்க்கிறோம்.

மத்திய சட்டமன்ற கூட்டத்தொடரின் பிப்ரவரி 22, 23 1946 நாட்களின் குறிப்புகளை பார்க்கும்போது கீழ்கண்ட அம்சங்களை நாம் காணமுடியும்

பிப்ரவரி 22 அன்று கேள்வி நேரத்தில் அனந்தசயனம் அய்யங்கார் ரின் போராட்டம் குறித்து 5 கேள்விகளை எழுப்பினார். போராடியவர்கள், அரசாங்க நடவடிக்கைகள், கோரிக்கைகள்- தீர்வு குறித்து, ஏதாவது குறைதீர் கமிட்டி போடப்பட்டுள்ளதா என கேள்விகள் எழுப்பப்பட்டிருந்தன.

பாதுகாப்பு செயலர் மாசன் தனது பதிலில் பிப்ரவரி 15 முதல் 21 வரை ஒழுங்கீனம் காணப்பட்டது. 537 பேர்கள் இதில் கலந்துகொண்டனர். மிலிட்டரி போலீஸ் வரவில்லை. போராட்டக்காரர்கள் என்னிடம் 19 ஆம்தேதி மெமோரண்டம் தந்தனர். அது பரிசீலனையில் இருக்கிறது. அரசாங்கம் குறைதீர் கமிட்டி ஏதும் அமைக்கவில்லை. கமாண்டர் பிப்ரவரி 21 இரவு 8.30க்குள் பணி திரும்ப அறிவுறுத்தினார். பலர் திரும்பியுள்ளனர் என்றார்.

பிரிட்டிஷ் வீரர்களுக்கும் இந்திய வீரர்களுக்கும் ஊதியம் அலவன்சில் வேறுபாடு இல்லையா என அனந்தசயனம் எழுப்பிய கேள்விக்கு இருக்கிறது என மாசன் ஏற்றார்.

ஆசப் அலி அனைத்து விஷயங்களையும் ஏன் Defence Consultative committeeக்கு விடக்கூடாது என கேள்வி எழுப்பினார். மாசன் அதை நல்ல யோசனை என ஏற்றார்.

அனந்தசயனம் எவரும் பழிவாங்கப்படமாட்டார்கள் என உறுதிமொழியைக் கேட்டபோது அப்படி தரமுடியாதென்றார் மாசன். எம்

ஆர் மசானியும் பல கேள்விகளை எழுப்பினார். ஆசப் அலி கொணர்ந்த adjournment motion ஏற்கப்பட்டது.

பிப்ரவரி 22 அன்று அவை கூடியவுடன் ஆசப் அலி கேள்வி நேரத்தை நிறுத்திவைக்க வேண்டினார். அதன்மீது விவாதம் நடந்தது. கேள்விநேரம் தொடர்ந்தது. அதைப்பயன்படுத்திக்கொண்டுதான் அனந்தசயனம் அய்யங்கார் ரின் போராட்டம் குறித்து முதலில் கேள்வி எழுப்பினார்.

ஊதிய உயர்வு ஏற்கப்பட்டால் அது நேவிக்கு மட்டும் என இருக்கமுடியாது. ஆர்மி போன்ற பிற பகுதிகளிலும் தாக்கத்தை உருவாக்கும் என்பதை உறுப்பினர்கள் புரிந்துகொள்ளவேண்டும். இதனால் கணிசமான மனித சக்தி அங்கு குறைந்து போகவும் அது வழி வகுக்கும் என மாசன் தெரிவித்தார். பிப்ரவரி 22ல் வேறொரு கேள்விக்கு பதில் அளிக்கும்போது போராட்டத்தில் இதுவரை ஈடுபட்டோர் எண்ணிக்கை 12 ஆயிரம் என தகவல் இருக்கிறது என்றார் அரசாங்க செயலர் மாசன்.

ஆசப் அலி குறுக்கிட்டு இப்படி கேள்விகளும் தெரிவிக்கும் பதிலுமாக இப்பிரச்சனை நீள்வது சரியல்ல. ஆழமாக விவாதிக்கப்படவேண்டும் என்றார். காட்ஃப்ரேவின் மோசமான அறிக்கையே என்னை ஒத்திவைப்பு தீர்மானத்தை கொணரச்செய்தது என அவை புரிந்துகொள்ளவேண்டும் என்றார்.

ஆசப் அலியிடம் அவையில் தீர்மானம் இல்லையே என அவைத்தலைவர் கேட்டதற்கு இன்று நான் அதை முன்மொழிகிறேன் என ஆசப் தெரிவித்தார். சரத் போஸ் அவர்களும் ஆசப் அலியை வழிமொழிந்து விவாதத்தின் அவசியத்தை ஏற்றுக்கொண்டால் ஒத்திவைப்பு தீர்மானம் எப்போது அவசியம் என்று கூட பேசிக்கொள்ளலாம் என்றார்.

மாசன் தலையீட்டு நிலைமை நேற்றையைவிட நன்கு மேம்பட்டுள்ளது என்றார். ரங்கா இப்போது என்ன நிலைமை என்றார்.

ஆசப் அலி தனது motion ஏற்கப்படவேண்டும் எனச் சொல்கிறார்- விவாதத்தை திங்கட்கிழமை வைத்துக்கொள்ளலாம் என மாவலங்கா தலைவர் தெரிவித்தார். பின்னர் The Motion is in order. I admit it but the dis-

cussion of it will take place on Monday என அறிவித்தார்.

எம் ஆர் மசானி தனது தீர்மானம் பரிசீலிக்கப்படவேண்டும் என்றார். அதே பொருளில் என்பதால் அந்த motion விவாதத்திலேயே அதையும் வைத்துக்கொள்ளலாம் என்றார் அவைத்தலைவர் மாவலங்கர்.

மாளவியா நாம் ஏன் திங்கட்கிழமைவரை காத்திருக்கவேண்டும் நாளையே கூடி விவாதித்துவிடக்கூடாது என்ற ஆலோசனையை தந்தார். பிரச்னையின் அவசரத்தை உணர்ந்து நாம் யாரும் நாளை விடுமுறை விடவேண்டாம் என்றார். சனிக்கிழமை உட்கார அவை விரும்புமா என தலைவர் கேள்வி எழுப்பினார். சரத்போஸ் அனைத்து வேலைகளையும் ஒத்திவைத்துவிட்டு நாளை சனிக்கிழமை (பிப்ரவரி 23) விவாதத்தை எடுத்துக்கொள்ள வேண்டினார்.

Leader of the House என்ன சொல்கிறார் எனக் கேட்போம் என்று தலைவர் அவர் கருத்தைக் கேட்டார். எட்வர்ட் பென்ந்தால் தாங்கள் கூறியபடி திங்கட்கிழமை மாலை 4 மணிக்கு இந்த விவாதத்தை எடுத்துக்கொள்ளலாம் என்றார். இதில் பொதுவான ஏற்பு இருக்கிறதென்றார்.

ஆசப் அலி நாளை இதைவிட வேறு முக்கிய அலுவல் எடுத்துக்கொள்ளப்போவதில்லை என்றால் எனது தீர்மானத்தை விவாதிக்கலாமே என்றார். I insist that adjournment motion should be taken up tomorrow. நாம் அனைவரும் தயார் எனில் அரசாங்கதரப்பில் என்ன பிரச்னை என்றார்.

சர்தார் மங்கல் சிங் அந்த தீர்மானத்திற்காக மட்டும் அவைக்கு வரவேண்டும் என ஏன் சொல்லவெண்டும். அனைவரும் பேச விரும்புவர் என்ற வகையில் இரண்டுமணிநேரம் எனச் சொல்லாமல் முழுநாளும் விவாதிக்கவாவது அனுமதிக்கவேண்டும் என்றார். மனிபென்கராவும் முழுமையான விவாதம் வேண்டும் என்றார்.

மாசன் தனது தயக்கத்தையும் விவாதம் எதிர்மறை விளைவுகளையே ஏற்படுத்தும் என்பதையும் கீழ்கண்டவரிகளில் வெளிப்படுத்தினார்

The Point I wish to make is that while negotiations are still going on and the matter is

being completed I question whether a discussion in this house is really in the public interest. It seems to me and I do say this with a sense of responsibility which, I know, is shared on the other side of the house- that the only effect of a further meeting and a long day's discussion on this subject tomorrow- the only effect it can have is to encourage those who are taking part in this discipline to continue, and that is what I think we all wish to avoid

சரத் போஸ் இதற்கு கடுமையான பதிலை தந்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மொழியில் ஒழுங்கு ஒழுங்கீனம் என்பவை என்ன என அறிவோம். உங்கள் டிக்ஷனரியில் சட்டம் ஒழுங்கு காப்பது என்பது என்னவென்று எங்களுக்கு தெரியும். எங்களுக்கென ஒரு பார்வை இருக்கிறது. எனவே நாளை பேசவேண்டியது அவசியம் என்றார்.

லியாகத் அலிகான் உடனடியாக விவாதிப்பதால் எதிரமறை விளைவுகள் இருக்காது. அது நலம் பயக்கும். நம்மில் எவரும் எந்த விளம்பரத்திற்காகவும் இந்த பிரச்னை குறித்து பேசப்போவதில்லை என்றார்.

கிரிஃப்த்ஸ் எனக்கு நாளை விவாதம் வந்து பிரச்னைகளை தீர்த்துவிடும் என்ற நம்பிக்கையெல்லாம் இல்லை. அவசரமாக விவாதிக்கவேண்டும் என உணர்வு அவையில் இருந்தால் அதை எதிர்க்கவேண்டியதில்லை என்றார்.

மாசனிடமிருந்து secret session வைத்துக்கொள்ளலாமா என்ற கேள்வி வந்தவுடன் சரத் போஸ், லியாகத் அலிகான், கிரிஃப்த்ஸ் ஆகிய அனைவருமே அது நிலைமையை மேலும் மோசமாக்கிவிடும் என்றனர். மாசன் லியாகத் கருத்தை ஏற்பதாக தெரிவித்தார். அனந்தசயனம் விதிகளின்படி நாளையே அலுவல்களுக்காக கூடி ஒத்திவைப்பு தீர்மானத்தை எடுத்து விவாதிக்கலாம் என் ஆலோசனை நல்கினார்

எட்வர்ட் பெந்தால் தனது ஆலோசனையை நல்கினார். தலைவர் நாளை 4 மணிக்கு தீர்மானத்தை எடுத்துக்கொள்ளலாம். முன்னதாகவும் இறுதியாகவும் மாசன் தனது விளக்கத்தை தருவதற்கு வாய்ப்பு இருக்கவேண்டும் என்றார். லியாகத் அலியும் The war secretary is going to make a statement before the House and after that the Adjournment Motion will be taken up என்றார்.

மாசன் தனது அறிக்கைக்கு எவ்வளவு நேரம் தேவைப்படும் எனக் கேட்கப்பட்டபோது எனக்கு கிடைக்கும் தகவல்களைப் பொறுத்து 15- 20 நிமிடம் தேவை என மாசன் பதில் தந்தார்.

நாளை மாலை 3 மணிக்கு கூடலாம் என்று அவையை ஒத்திவைத்தார் தலைவர் மாவலங்கர்.

பிப்ரவரி 23 அன்று ஆசப் அலி கொணர்ந்த தீர்மானம்:

**I move That the Assembly do now adjourn. This is to discuss the grave situation that has arisen in respect of the Indian navy affecting practically the whole of it, as a result of mishandling by the immediate authorities concerned**.

தீர்மானத்தை முன்வைத்து ஆசப் பேசும்போது ஏன் போராட்டம் எழுந்தது, சேவை நிலைமைகள், ஊதிய வேறுபாடுகள், அதிகாரிகளின் தோரணைகள்- ஏளனங்கள் என அனைத்தையும் சுட்டிக்காட்டினார். அவர்களின் அரசியல் கோரிக்கைகளை நான் பேசவில்லை என்றார். நிலைமைகளின் நிர்ப்பந்தங்களில் அவை எழுந்தன என்றார். அவர்கள் கட்சிகளுக்கு கொடுத்த வேண்டுகோளை நான் பேசப்போவதில்லை. பாரபட்சமாக இருந்தது ஏன் ? அவர்கள் அனைவரும் நாட்டுப்பற்றுடன் இருப்பவர்கள்- இதனால் அவர்கள் ஏதாவது எல்லை மீறி சென்றார்களா என்பதை பரீசீலிக்கலாம். இராணுவத்தில் வேலைநிறுத்தம் என்பது கடுமையாக பார்க்கப்படவேண்டிய ஒன்றுதான். ஆனால் இவர்களா பிரச்னையை துவங்கி வைத்தவர்கள் என் ஆசப் தனது உரையில் தொட்டுக்காட்டினார். அவை தொடர்நிகழ்வின் வெளிப்பாடுகள் என்றார். Sir, all I can say is this that not one word has been heard in justification of the conduct of the immediate authorities whom I am condemning by this motion.

இந்த தீர்மானம்தான் வாக்கிற்கு விடப்பட்டு பெரும்பான்மை ஆதரவைப்பெற்று அவையில் ஏற்கப்பட்டதை முன்னரே கண்டோம்.

# 7. பெர்சி தரும் உரையாடல்

Percy Gourgey என்கிற அதிகாரி castle Barracks பகுதியில் இருந்தவர். போராட்டத்தைப் பார்த்தவர். வீரர்களுடன் தலைவர்களுடன் உரையாடியவர். இப்போராட்டம் குறித்து அவர் புத்தகம் ஒன்றை எழுதியுள்ளார். அதில் நிகழ்வுகள் பற்றி விளக்கிவிட்டு அவருக்கும் போராட்டக் கமிட்டி தலைவர் கான் அவர்களுக்குமான உரையாடல் ஒன்றை பதிவிட்டுள்ளார். அந்த உரையாடல் கானின் அரசியல் சிந்தனைத்திறனை வெளிப்படுத்துவதாக இருக்கிறது.

பிப்ரவரி 19 அன்று காரிலிருந்து இறங்கி அலுவலகத்திற்கு காலை 9 மணி அளவில் பெர்சி நுழைகிறார். நிலைமைகள் சரியில்லாததைப் பார்க்கிறார். விசாரிக்கையில் ஊழியர் ஒருவர் strike sir என்கிறார். அப்படியொன்று ஆர்மியில் இருக்காதே கலகமா என பெர்சி கேட்கிறார்.

கமாண்டர் அதிகாரிகளை அழைக்கிறார். முதல்முறையாக நேவியில் கலகம். நமக்கு அறிவுறுத்தல் வரும்வரை எந்த அடக்குமுறையும் வேண்டாம். ஒழுங்கு நடவடிக்கை என போவதற்கு முன்னர் எச்சரிக்கை தேவை என்கிறார். எங்களில் பலர் அதிகாரிகள் மெஸ் பகுதிக்கு சென்றோம்.

அய் என் ஏ விசாரணை தேசத்தில் பெருங்கோபத்தை உருவாக்கியுள்ளது. டெல்லியில் நேதாஜி நாள் எழுச்சியுடன் அனுசரிக்கப்பட்டிருந்தது. பிற பிரச்சனைகளில் வேறுபட்டாலும் ரின் போராட்டத்தில் காங்கிரஸ் முஸ்லீம் லீக் இருவரும் தங்கள் ஆதரவு நிலைப்பாட்டை எடுத்தனர். வல்லபாய் படேல் நேவியில் நிலவிய பாரபட்சம் குறைகளை சுட்டிக்காட்டினார். மக்கள் போராடுபவர்களிடம் பரிவு காட்டி உடன் நிற்பார்கள் என்பதை புரிந்துகொள்ளவேண்டும் என்றார்.

பிரதமர் அட்லி தனது அறிக்கையை நாடாளுமன்றத்தில் தருவார் என்பது பெர்சி போன்ற அதிகாரிகளுக்கும் சொல்லப்பட்டிருந்தது.

முதல்நாள் பிப்ரவரி 18ல் தல்வார் சார்ந்த தெற்கு பம்பாய்

கொலாபா சிக்னல் ஸ்கூலில் ஆயிரம்பேர் பணி மறுப்பு செய்தனர். உண்ணாவிரதம் மேற்கொண்டனர். பல தொடர் நிகழ்வுகள் நடந்திருந்தன. இந்தியத்தலைவர்கள் ஜூன் 1945ல் விடுதலை செய்யப்பட்டிருந்தனர். வைஸ்ராய் வேவலுடன் பேச்சுவார்த்தை நடந்தது. INA விசாரணை துவங்கியிருந்தது. இராணுவ வீரர்களிடத்தும் தேசிய உணர்வு பெருகியிருந்தது. நேவியிலும் குவிட் இந்தியா, பிரிட்டிஷ் ராஜ்யம் வீழட்டும், காந்தி நேருவிற்கு வெற்றி என முழக்கங்கள் கேட்டன.

முழக்கங்கள் எழுதப்பட்டிருந்ததைப் பார்த்து அதிகாரி கிங் சத்தம் போட்டார். அனைத்தையும் சுத்தம் செய்து ஒழுங்கு நிலவவேண்டும் என உத்தரவிட்டார். சீக்கிரம் செய் கூலிகளா- bitches என ஏசினார். கிங் பேசியது பரவியது. ரேட்டிங்ஸ் கூடி குவிட் இந்தியா என முழக்கமிட்டனர். கிங் தனது அலுவலகத்திற்கு செல்லநேர்ந்தது. அவர் உயர் அதிகாரி ரேர் அட்மிரல் ராட்ரேவிற்கு தெரிவித்தார். வைஸ் அட்மிரல் காட்ஃப்ரேவிற்கும் தெரிவிக்கப்பட்டது.

சிக்னல் பகுதியின் புன்னு கான் போராட்டக்காரர்களுக்கு தலைமையேற்றார். பிற naval esatablishmentகளுக்கு ரேடியோ செய்தியை இங்கிருந்து அனுப்பினர். பம்பாய், கராச்சி, கொச்சின், கல்கத்தா, சிட்டகாங், விசாகப்பட்டினம், மதராஸ் என போராட்டம் பரவியது. போராட்ட கமிட்டிகள் அமைந்தன.

தங்கள் சேவை நிலைமைகள், ஊதியம், பதவிகளை இந்தியமயமாக்கல் போன்ற கோரிக்கைகளை எழுப்பினர். மோசமான உணவு பெரும் பிரச்னையானது. இந்தியன் ராயல் நேவிக்கு ஏன் அந்நியர் என்பது கேள்வியானது.

முதலில் எங்கள் எல்லோருக்கும் அதிர்ச்சியே இருந்தது என்கிறார் பெர்சி. இந்திய அதிகாரிகள் இருவர் நிலைமையை அறிய அனுப்பப்பட்டனர். ரேட்டிங்க்ஸ் கட்டுப்பாட்டில் எல்லாம் போய்விட்டது என தகவல் கிடைத்தது. வன்முறை ஏதும் இல்லை என்றனர். வழக்கமான பணிகள் பாதிக்கப்பட்டிருந்தன.

காவல் பலப்படுத்தப்பட்டிருந்தது. செக்யூரிட்டி செக் பலப்படுத்தப்பட்டது. போராளிகளுக்கும் அனைவரது சந்தேகங்களையும் தீர்த்து தொடர்வதில் சிக்கல் இல்லாமல் இல்லை. குழப்பமான நிலை நிலவியது. சிலர் நமது குறைகளை முறையாக கொண்டு சென்று தீர்க்க இயலாதா எனக் கேட்டனர். ஒழுங்கு நடவடிக்கை வருமே என்கிற கவலையை வெளிப்படுத்தினர்.

பம்பாய் நகரத்தில் பல வதந்திகள் பரவின. அங்கும் பொறுப்பு வாய்ந்தவர்களால் நிலைமை ஆரம்பத்தில் வழக்கமாக தொடர்ந்தது. போராட்டக்கமிட்டியும் மிக்க கட்டுப்பாட்டுடன் இருக்க அனைவரையும் வேண்டியது.

பொதுக்கூட்டம் ஊர்வலம் என நகர்வுகள் இருந்தன. புன்னு கான் உட்பட பலர் பேசினர். மகாத்மா காந்திக்கு ஜே, புரட்சி ஓங்குக முழக்கங்கள் இருந்தன. தொப்பி டை அணிந்தவர்கள் சிவிலியன்களால் துன்புறுத்தலுக்கு உள்ளாயினர். ரின் பெட்டி ஆபீசர் கூட தன் தொப்பியை எடுக்க வற்புறுத்தப்பட்டார்.

பெர்சி எழுதியதில் The goonda elements of Bombay’s underworld took advantage of the situation and joined in rioting எனச் சொல்வதைப் பார்க்கிறோம். கூட்டத்தினர் மீது லத்தி சார்ஜ் நடந்தது. கடைகள் மூடப்பட்டன. ரேட்டிங்ஸ் சந்துகளின் வழியே தப்பி செல்ல நேர்ந்தது. சில இடங்களில் சோடா பாட்டில் வீச்சு நடந்தது. கையெறி குண்டு வீசப்பட்டது. தீக்கிரையாக்குதலும் நடந்தது. அன்று இரவு பல சிறைக்கூடங்கள் நிரம்பின. வெளியே தேசிய முழக்கங்களை கூட்டத்தினர் எழுப்பினர். போலீஸ் பந்தோபஸ்து சுற்றிலும் கூட்டப்பட்டது.

மூன்றாவது நாள் காலை பெர்சி அலுவலம் சென்றபோது மிலிட்டரி குவிப்பு இருந்தது . மராத்தா பிரிவு அழைக்கப்பட்டிருந்தது. ரேட்டிங்க்ஸ் கற்களை எறிந்தனர். ஏளனக்குரல் எழுப்பினர். முந்திய இரவு ஆயுதகிடங்கிலிருந்து உடைத்து ஆயுதங்களை எடுத்ததாக தெரிவிக்கப்பட்டது. அவர்கள் தலைவர்களிடமா யாரிடம் ஆயுதங்கள் இருக்கின்றன என பெர்சி தெரிந்துகொள்ள முயற்சித்ததாக சொல்கிறார். மீண்டும் பாட்டில்கள் வந்து விழுந்தவுடன் கேப்டன் ek round fire என்றார்.

சுபேதார் மேஜர் இரத்தம் வழிய வந்தார். அவர் ரிவால்வர் எடுத்ததை பெர்சி கட்டுப்படுத்தினார். What are you doing I yelled can't you see he is unarmed- don't you realise what could happen if you hit him என பெர்சி பதிவு சொல்கிறது. பெர்சி சொல்வது சரி என்றார் கேப்டன்.

நிலைமைகள் பல இடங்களில் மோசமான தகவல்களே வந்துகொண்டிருந்தன. அடையார் மதராஸ் பற்றியும் வந்தது. அங்கு பெர்சி பணியாற்றியுள்ளார். ரேட்டிங்க்ஸ் சிலர் ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட்டனர். போராட்டக்கமிட்டி வன்முறையையும் ஒழுங்கின்மையையும் குறைக்க முயற்சித்தது. பெர்சியும் மற்ற அதிகாரிகளும் இரத்தம் சிந்துதல் இல்லாமல் முடிக்கவேண்டும் என முயற்சித்தனர். பிரிட்டிஷ் படையை நாம் அகற்றவிட்டால் இருபக்க தாக்குதல் நேரலாம் என சில அதிகாரிகள் தெரிவித்தனர்.

அங்கிருந்த ஆங்கில மேஜர் ஒருவர் தனக்கு கமாண்டர் இன் சீப் கட்டளை இருப்பதாக தெரிவித்தார். எங்களுக்கு எங்கள் ரேட்டிங்க்ஸ் பற்றி தெரியும் என பெர்சி போன்றவர் தெரிவித்தனர். உடனடியாக அசம்பாவிதம் ஏதுமில்லை. ஆனால் ரேட்டிங்க்ஸ் troopsகளை திரும்ப பெறு என்றனர். அவர்கள் நினைத்திருந்தால் கப்பலையே அழித்திருக்கலாம். அவர்கள் தலைவர்கள் சொல்லுக்கு கட்டுப்பட்டு மீறாமல் இருந்தனர்.

கான் வந்தார். அனைவரும் திரும்பவேண்டும். பேச்சுவார்த்தை தொடங்கியுள்ளது என்றார். படேலை சந்தித்தோம். அவர் உதவுவதாக சொல்லியிருக்கிறார் என்றார். சுமூக நிலை என பெர்சி உள்ளிட்டோர் கருதினர். இரவு 10 மணிக்கு பெர்சி வீடு திரும்பினார்.

புன்னு கானிடம் பெர்சி விசாரித்தார். ஏன் இதெல்லாம்? அரசியல் ஏன்?. புன்னு கான் இரு வருடமாக எந்த குறையும் தீரலையே என்று பதில் தந்தார். ஆபிசர் மெஸ்ஸில் இந்த உரையாடல் நடந்தது. உடன் வந்த சிங் தனது நிலையை பேசினார். பஞ்சாப் அவர் கிராமத்தில் பெரும் வெள்ளம் வந்து குடும்பம் பாதிக்கப்பட்டதை வயல் நாசமானதை தெரிவித்தார். வயதானவர்கள் சாகும் தருவாயில் இருந்தனர். மனைவி உடன் வரச்சொல்கிறாள். விடுப்பு மறுக்கப்படுகிறது என தன் வேதனையை

சிங் காட்டினார்.

கான் தன் கதையை ஜமீன்களால் கொடுமைக்குள்ளான குடும்பம் பற்றி தெரிவித்தார். வீட்டிலிருந்து துரத்தப்பட்ட கொடுமையை விவரித்தார். அங்கு போய் அவர்களை காக்கமுடியவில்லை. நாளைக்கே விடுவித்தால் போய்விடுவேன் என்றார். இப்படி ஏராளக்கதைகள் இருக்கிறது. அதுதான் வெடித்தது என்றனர் அப்போராளிகள்.

அரசியல் தலைவர்கள் சிலர் எங்களிடம் பிரிட்டிஷ் ராஜ்யம்தான் அனைத்திற்கும் காரணம் என சொல்லிவந்தனர். தேசிய உணர்வும் பலரிடம் இருந்தது. 90 சத இந்தியர் கிராமம் சார்ந்தவர்கள் என்றார் கான். ஏழைகளை அறிந்த காந்தி நேருவால் தான் தீர்க்கமுடியும் என்ற எண்ணம் பொதுவாக இருக்கிறதென்றார்.

கலகம் இரத்தம் சிந்துதலில் முடியும். ஆனால் நாங்கள் அமைதியான வேலைநிறுத்தமே செய்யவிழைகிறோம் என்று கான் சொன்னபோது, பெர்சி வன்முறை புகுந்துவிட்டதே கான் என்றார். அதற்கு நாங்கள் பொறுப்பாக மாட்டோம் என்றார் கான். அவர் காந்தியை மேற்கோள் காட்டி தொடர்ந்து பேசினார். Gandhi said ”My aim is to wipe every tear from every eye.

பெர்சி காங்கிரஸ் கமிட்டி முழு ஆதரவை தந்ததாக தெரியவில்லையே என நினைத்துக்கொண்டார். கானின் காந்தி மீதான நம்பிக்கை பற்றி பெர்சி பெருமிதம் கொண்டார். அகிம்சை வழி அவர் நிற்க விழைவது புரிந்தது. ஆனால் நீங்கள் இப்படி போராடிக்கொண்டிருந்தால் எதிர்வினை கடுமையாக இருக்குமே என்பதை பெர்சி சுட்டிக்காட்டினார். அப்படியிராது என நம்புகிறோம் என்றார் கான்.

வேறு ஒருவர் அப்படி நடந்தால் எனக் கேட்டதற்கு சத்தியாகிரகி போல் நாங்கள் நடந்துகொள்ளவேண்டும் என்றார் கான். Passive resisters .? No என்றார் கான். We shall resist till we exhaust the limit of our moral, mental and intellectual capacities, but without use of physical force. எங்களுக்கு ஏதாவது நேர்ந்தாலும் மற்றவர்கள் போராடுவர். சட்டமன்றம் கூட எங்களுடன் நிற்கும். திரள் கூட்டங்கள் நடக்கும்.

பெர்சி கோர்கே தொடர்ந்து கானிடம் கேட்டார். கோர்ட் மார்ஷல் ஆனால் சிறை வைக்கப்பட்டால் ? உண்மை நிற்கும் என்றார் கான். எங்கள் நம்பிக்கை எங்கள் நியாயம் நிற்கும் என்றார். அப்போது சிறை ஏற்பீர்களா எனக்கேட்டதற்கு ஆமாம் என்றார் கான். காந்தி, நேரு பல ஆண்டுகள் சிறையில் இருந்தார்களே என்றார். Justice is truth in action என கான் காந்தியம் பேசியதாக பெர்சி பதிவு செல்கிறது. கான் மேலும் அழகாக விளக்கினார். That is not martyrdom. Martyrs are those who are made to suffer by the authorities who know that they themselves are in the wrong in the passing of the sentence and in the manner of execution.

பெர்சி கோர்கே திரும்பவும் சொல்கிறார் கான் நீங்கள் தான் முழு பொறுப்பாவீர்கள்..I don’t know if you are being sensible, but you have plenty of courage.

கான் ஆமாம் அஞ்சாமை அவசியம் என்றார். அகிம்சை சுயதியாகத்தை கோருவது என்றார். சத்தியாகிரகி அதற்கு தயாராக இருக்கவேண்டும்.

பெர்சி கோர்கே நீங்கள் கொல்லப்பட்டால் நோக்கம் சிதைந்துவிடுமே எனக் கேட்டார். என்ன செய்வது..அகிம்சை வழி எதிரியை மனமாற்றம் செய்யும் என கருதுவதாக கான் தெரிவித்தார். ஏன் நீங்களும் ஆயுதம் ஏந்தி எதிரியை வீழ்த்தலாமே எனக் கேட்டபோது கான் that depends on circumstances but violence breeds violence என்றார்.

ஹிட்லர் அழிக்கப்பட போரும் ‘மாரல்’ அம்சங்களும் இணையவில்லையா எனக் கேட்கப்பட்டபோது கான் அந்த வன்முறை கோடிக்கணக்கானவரை பலியிட்டதே. ஹிட்லரும் நாட்டைக்காக்கவே போராடியதாக கருதியவர்களும் உண்டே என்றார். கானின் வரிகளை பெர்சி காட்டுகிறார். If two nations believing in their ultimate ideals, feel that only clash of arms will resolve the clash of ideals, there is no hope for humanity..atom bomb, modern science has made defence for one nation seem offence to another..if accepts non violence Humanity at least have breathing space, if not agreement. கான் அவர்களின் இந்த உரையாடல் அவரின் மேதமையை புலப்படுத்துவதாக அமைந்துள்ளதைக் காண்கிறோம்

பிரிட்டிஷ் காலனியம் பற்றி உரையாடல் தொடர்ந்தபோது அது சமத்துவத்தை மறுப்பதாகவுள்ளது. சொந்த நாட்டினரின் வளர்ச்சியை தடுப்பதாகவுள்ளது. அது ஒழிவது நலம்பயக்கும் என்றார் கான்.

கோர்கே எவரிடம் இந்துக்களிடமா முஸ்லீம்களிடமா அதிகாரத்தை ஒப்படைத்து செல்வது எனக் கேட்டார். அதை பேச்சுவார்த்தையில் அனைத்து தரப்பு மாநாட்டில் முடிவெடுக்கலாம் என்றார் கான்..I am an Indian Muslim and I trust our leaders என்றார். நாங்கள் அதிகாரம் எடுத்துக்கொள்ள தயாராக இல்லை என்பதை பிரிட்டிஷ் எதை வைத்து சொல்கிறது என பதில் கேள்வி எழுப்பினார் கான்.

கோர்கே கம்யூனிஸ்ட்கள் சிவிலியன்களுடன் கலக்க உங்கள் கலகம் உதவியுள்ளது என்ற குற்றசாட்டை வைத்தார். கான் அழகான பதிலைத் தருகிறார். We are not responsible for that! Communists breeds where the needs of the masses are unfulfilled - Where there exists poverty, hunger and ignorance. Communists will seek to exploit any situation. The authorities can best meet the Communist challenge by providing for the needs of the masses. கான் கம்யூனிஸ்ட்கள் குறித்து விமர்சனத்துடன் கூடிய மதிப்பீடுகளைத் தந்ததைக் காண்கிறோம். தாங்கள் அவர்கள் வழியை ஏற்கவில்லை என அவர் உரையாடல் தொடர்ந்தது. எங்களுக்கு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் போய் வேறு மாஸ்கோ என எஜமானர் மாற்றம் வேண்டாம் எனவும் அவர் தெரிவித்த செய்தியை பெர்சி சொல்வதைப் பார்க்கிறோம்.

In our central strike committee we reject communists and their methods. Communism means subservience to Moscow. They bring sham independence..we won’t exchange one set of imperialist masters for another. But you must be clever to outwit communists. They play a subtle game..

Non violence is best..it calls for soul force and intellectual ability. With this we can defeat colonialists and communists.

About thirty years ago, no one believed the poor masses of Russia could ever overthrow the all powerful Tsar. But the communists did it, by violence, which Lenin taught them

was the only way.

We believe non violence the only way ..இவ்வாறு நட்பான ஆங்கில அதிகாரிகளுடன் கான் உரையாடல் பெரும் அரசியல் விளக்கங்களுடன் நடந்தது என அறியும்போது வியக்காமல் இருக்கமுடியவில்லை.

நான்காவது நாள் பதட்டம் நீடித்தது. பல ரேட்டிங்ஸ் கையில் துப்பாக்கியுடன் இருந்தனர். திடிரென 'கவர்' என எங்களுக்கு ஒருவர் தெரிவித்தார் என்கிறார் பெர்சி. 'புல்லட்' ஒன்று என் தலை அருகே சென்றது என பெர்சி எழுதுகிறார். போன் பழுதானது. இரு பக்கத் தாக்குதல் நடந்தேறியது. வெள்ளைக்கொடி காட்டி பேச்சுவார்த்தைக்கு அழைக்கலாம் என சில அதிகாரிகள் தெரிவித்தனர். இல்லை. பிரிட்டிஷ் பெருமிதம் இழக்கமுடியாதென்றனர். Empire at stake என கத்தினர். பன்றிகளிடம் ஒரு போதும் தோற்கமுடியாதென்றனர். 5 மணிநேரத்திற்கு பின்னால் முன்பு சொல்லப்பட்ட வெள்ளைக்கொடிதான் பறந்தது. பலர் காயமுற்றனர். சிலர் கொல்லப்பட்டனர். அருகில் இருந்த மக்கள் பலர் அப்புறப்படுத்தப்பட்டிருந்தனர்.

இதற்கிடையில் போராட்டக்கமிட்டி கூடி பேச்சுவார்த்தை காலையில் என சொல்லியிருந்தது. பம்பாய் நகரில் பெருங்குழப்பம் நிலவியது. மில் பகுதியில் 4 இம்பீரியல் வங்கி கிளைகள் தீக்கிரையாகின. புனேவிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வந்தன. சிவில் போலீஸ் துப்பாக்கி சூடுகளை நடத்தினர். இரு பக்கத்திலும் சாவும் காயமுற்றோரும் கூடினர். டெல்லியில் 38 ரேட்டிங்ஸ் கைது செய்யப்பட்டு விசாரிக்கப்பட்டனர். அனைவரும் சரண்டர் ஆகி அவரவர் இடங்களுக்கு திரும்ப அறிவுறுத்தப்பட்டனர்.

கவர்னர் ஆர் ஜான் கால்வில்லே வைஸ்ராய் வேவலுக்கும் அவரது எக்ஸிக்யுட்டிவ் உறுப்பினருக்கும் நிலைமைகளை அவ்வப்போது தெரிவித்துக்கொண்டிருந்தார்.

வெள்ளிக்கிழமை அன்று கஸ்தூர்பா மறைவுதினம். காங்கிரசும் ஹர்த்தால் எனப்பேசியது. ஆனால் நிலைமைகள் மோசமாகும் என அறிந்து ஹர்த்தால் இல்லை என அறிவித்தது. காங்கிரஸ் போராட்டத்தை

விரும்பாவிட்டாலும் தொடர்வோம் என தல்வார் வீரர்கள் தெரிவித்தனர். அருணா ஆசப் அலி வரவேண்டும் என்று கோரினர்.

பெர்சி சென்று கானை ஜீப்பில் அழைத்து வந்தார். தேசிய எழுச்சி பெருகியுள்ளது. கிடைக்கப்போகும் தண்டனை காங்கிரஸை பொறுத்து அமையும் என்றார் கான். அவரை வீரர்கள் கூடிநின்று வரவேற்றனர். காட்ஃப்ரே பேசப்போகிறார் என்கிற செய்தி வருகிறது. மதியம் 2 மணிக்கு அவரது குரல் வானொலியில் வந்தது. அதில் நிபந்தனையற்ற சரண்டர் , ஆயுதங்களை கீழே போட எச்சரிக்கை, நேவியே அழிந்தாலும் அரசு முடிவிற்கு கொணரும் போன்ற அம்சங்கள் இருந்தன.

படேலும் குறைகள தீர்க்க காங்கிரஸ் உதவும், போராட்டம் நிறுத்தப்படவேண்டும் என்றார். காங்கிரஸ்காரர்கள் கம்யூனிஸ்ட்கள், சோசலிஸ்ட்களை குறை கூறினர். சட்டமன்றத்தில் குரல்கள் பிப்ரவரி 22 அன்று டெல்லியில் எழுந்தன. பிப்ரவரி 23ல் அட்லி லண்டனில் அறிக்கை தந்தார். காபினட் தூதுக்குழு குறித்தும் அறிவித்தார். மேலவையில் இந்த அறிவிப்பை பெதிக்லாரன்ஸ் செய்தார். டைம்ஸ் பத்திரிகை India is at critical stage என்பதை நாடாளுமன்றம் புரிந்துகொண்டதாக எழுதியது.

ஆசாத் காபினட் தூதுக்குழுவை வரவேற்றார். குறிப்பாக கிரிப்ஸ் இருப்பது மகிழ்ச்சி என்றார். இனியும் இந்திய உணர்வை ஒடுக்குவது இயலாத ஒன்று என்ற நிலை ஏற்பட்டுள்ளதென்றார். தூதுக்குழுவின் வரவு final overthrow ஆகவேண்டும் என்றார் ஆசாத்.

படேல் மிகவும் கஷ்டப்பட்டுத்தான் ரேட்டிங்ஸ்களை சரண்டருக்கு ஏற்றுக்கொள்ள வைக்க முடிந்தது..I am only hoping that authority will not hark back to old worn out methods and senselessly insist on former prestige.

ஆசப் அலி சட்டமன்றத்தில் mishandling of the situation by the immediate authorities concerned, and pass a vote of censure against the Government தீர்மானத்தை முன்வைத்தார். பாதுகாப்பு செயலர் மாசன் இத்தீர்மானம் நிலைமைகளை மோசமாக்கும் என்றார்.

சரண்டருக்கு பின்னர் வீரர்கள் முகாமில் அடைக்கப்பட்டனர். அரசாங்கம்

ஆர் சையித் பாசல் அலி பாட்னா தலைமை நீதிபதி தலைமையில் விசாரணைக்குழு அமைத்தது. அதில் நீதிபதி மகாஜன் லாகூர் உயர்நீதிமன்றம், கொச்சின் நீதிபதி கிருஷ்ணசாமி அய்யங்கார், வைஸ் அட்மிரல் பாட்டர்சன், மேஜர் ஜெனரல் ரீஸ் இருந்தனர். கமிஷனுக்கு செயலராக கானல் விஸ்வேஸ்வர் நாத் சிங் இருந்தார். 1946 மே மாதம் பம்பாயில் கமிஷன் அமர்ந்தது. சாட்சியங்களை விசாரித்தது.

1947 ஜனவரியில் கமிஷன் முடிவுகள் வெளியிடப்பட்டன. நேரு இடைக்கால சர்க்கார் செப்டம்பர் 1946ல் பொறுப்பிற்கு வந்தது. விசாரணக்குழு சம்பந்தப்பட்ட அதிகாரியை விமர்சித்தது. போராட்டம் 74 கப்பல்கள் 20 கரையோர நிறுவனங்களில் நடந்தது. 9 வீரர்கள், ஓர் அதிகாரி கொல்லப்பட்டனர். அதிகாரி ஊழியர் இடைவெளி குறைகள் தீராமல் இருக்க காரணமானதை கமிஷன் சுட்டிக்காட்டியது. அதிருப்திதான் முதன்மையான காரணம். நாட்டின் மீதான ஆரோக்கியமான அக்கறை அவசியம்தான், ஆனால் குறைகளை தீர்க்க அரசியலை பயன்படுத்துவது ஆபத்தானது.

அரசாங்கம் குறைகளை தீர்க்கவும், இனவேறுபாடுகள் அகற்றவும் உறுதி கூறியது. ஊதியம் உள்ளிட்டவை உட்குழு பார்வைக்கு விடப்படும் என்றனர். நேவியில் தோழமை உணர்வு உருவாகிட வழிவகை செய்வோம் என்றனர்.

நேரு கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களைப் பார்த்தார். புரட்சி அவசியம் என்றால் தேசியத் தலைவர்களே சொல்லியிருப்பார்களே. மோசமான சக்தியின் கைகளில் ஏன் சிக்கவேண்டும். நம்மிடம் சுதந்திரம் பெறுவதற்குரிய அனைத்து நல் அம்சங்களும் இருக்கின்றன. ஆனால் கட்டுப்பாடும் அவசியம். கடந்த 4 நாட்களில் நடந்தவை மோசமானவை. சில நல்ல விஷயங்களும் நடந்துள்ளன. காபினட் தூதுக்குழுவில் உடன்பாடு எட்டமுடியும். போராட்டம் குறித்து பொது விசாரணை வேண்டும். காங்கிரஸ் பாதுகாப்பிற்கு நிற்கும் என்றார்.

பெதிக் லாரன்ஸ் பம்பாயில் இந்த போராட்டம் காரணமாக மொத்தம் 237 பேர் உயிர்நீத்ததாகவும், 1037 பேர் காயமுற்றதாகவும் தெரிவித்தார்.. 9 வங்கிகள், 32 தான்ய கடைகள், வேறு 30 கடைகள், 10 அஞ்சலகங்கள், 10 காவல்நிலையங்கள் நாசமாயின.

பிரிவினைக்குப்பின்னர் பாகிஸ்தானுக்கு சிறிய நேவி சென்றது. இந்தியாவிற்கு தனது நேவியை நவீனப்படுத்திப் புதுப்பிக்கும் பெரும் பணி துவங்கியது..Indianisation of services மெதுவாக நடந்தேறியது. இதற்கு 50 ஆண்டுகளுக்கு பின்னர் வந்த நேவி அட்மிரல் ஷெகாவத் சொன்னார் Navy has to be built and cannot be bought. இந்தியாவின் பாதுகாப்பு என்பதில் பெருமளவு பங்கை நேவி செய்துகொண்டிருக்கிறது என பெர்சி தனது புத்தகத்தை முடித்துள்ளார். Percy s Gourgey எழுதிய The Indian Naval Revolt 1946 மற்றவர்கள் தந்த விவரங்களைப் போலவே தந்திருந்தாலும் அது பெர்சி-கான் உரையாடல் எனும் பகுதியால் தனித்தன்மை பெறுகிறது. விசாரணைக் கமிஷன் பற்றிய தகவல்களை சிறிய அளவேனும் பெர்சி தந்துள்ளார்.

# 8. போராட்டத்திற்கு பின்னர்

போராட்டக்காரர்கள் சரணடைய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதைக் கண்டோம். போராளிகளும் சரண்டர் என்பதை பரீசிலித்து தாங்கள் பிரிட்டிஷாரிடம் அல்ல இந்தியர்களிடம் சரண்டர் ஆகிறோம் என் அறிவித்தனர். மக்களின் ஆதரவிற்கு அவர்கள் நன்றி தெரிவித்தனர். தேச வாழ்வில் எங்கள் போராட்டம் வரலாற்று நிகழ்வாகிவிட்டது. மக்களின் இரத்தத்துடன் எங்கள் இரத்தம் கலந்துவிட்டது. மக்கள் வாழ்க- ஜெய் ஹிந்த் என்றனர். எம் எஸ் கான் தனது வார்த்தைகளாக :

I do not know where they are taking us. We shall never give in. Goodbye and good luck என்றார். கான், மதன்சிங் முலுந்த் முகாமிலும், ஏராளமான மாலுமிகள் கராச்சி மலிர்முகாமிலும் அடைக்கப்பட்டனர். கிரிமினல்கள் போல் நடத்தப்பட்டனர். முலுந்த் முகாமில் மோசமான நிலைமைகளை எதிர்த்து போராளிகள் உண்ணாநோன்பு இருந்தனர். காந்தி, படேல் வரவேண்டும் என்றனர். காங்கிரஸ் தலைமை அட்லி அமைத்த காபினட் மிஷன் உறுப்பினர்களுடன் பேச்சுவார்த்தைக்கு முக்கியத்துவம் தந்ததாக மெயின்ஸ்ட்ரிம் கட்டுரை ஆசிரியர் அஜீத் ஜாவத் விமர்சித்துள்ளார். முலுந்த் முகாமில் எம் எஸ் கான் இருப்பதால் பிரச்னை என அறிந்து அவரை இழுத்து சென்று லாரியில் தூக்கிப் போட்டதான பதிவைக் காண்கிறோம். இதைக்கண்ட அஸ்லாம் என்கிற மைனர் சிறுவன் கேப்டன் நாட் முகத்தில் தனது செருப்பை வீசினார், சட்டையை பிடித்தார். மராத்தா வீரர்கள் நாட் உத்தரவை ஏற்க மறுத்த நிலையில் அந்த முகாம் மூடப்பட்டது.

கப்பற்படை எழுச்சி குறித்து வைஸ்ராய் விசாரணைக் கமிஷன் ஒன்றை அமைத்தார். அந்த அறிக்கை ஜூலை 1946ல் 600 பக்க அளவில் கொடுக்கப்பட்டும் பொதுப்பார்வைக்கு இதுவரை கிடைக்கப்பெறவில்லை என எழுதுகிறார் ஜாவத். ஜனவரி 1947ல் பாதுகாப்பு அமைச்சகம் வெளியிட்ட குறிப்பிலிருந்து பார்த்தால் ஆங்கில அதிகாரிகள் எவரும் தண்டனைக்கு உட்பட்ட செய்தியில்லை. நூற்றுக்கணக்கானவர் டிஸ்மிஸ்

செய்ய்ப்பட்டதைப்பற்றிய குறிப்பேதும் இல்லை. இதனிடையில் இடைக்கால நேரு அரசாங்கமும் பதவியேற்றது. பேராசிரியர் ஜாவத் இப்படித்தான் தனது கட்டுரையை முடித்திருந்தார்.

The Indian leaders thus failed the revolt which was unitedly fought by the Navy and the masses for a united India. In order to grab power, they preferred to negotiate than fight and agreed to a settlement even at the cost of partition. Had they risen to the occasion India perhaps would have been spared the agony of the country's vivisection! ஆனால் ஜாவத் எழுத்து நிலைமைகளை மிகைப்படுத்தி பார்த்த ஒன்றாகவே படுகிறது.

பிப்ரவரி 23 சனிக்கிழமை போராட்டக்குழுவில் கடுமையான கருத்துவேறுபாடு ஏற்படுகிறது. சரண்டர் கூடாது என ஒரு பிரிவினர் நின்றனர். சர்தார் படேல் சரணடைய சொல்லிவிட்டார் என ஒரு பிரிவினர் நின்றனர். எம் எஸ் கான் ஜின்னா செல்வாக்கிலிருந்து மீறமுடியாத நிலையில் இருந்ததாக போஸ் பதிவு சொல்கிறது. ஆனால் பெர்சி பதிவில் அவர்காந்தி குறித்தே பேசியதைக் காண்கிறோம். போராட்டக்கமிட்டியின் தலைவர் என்ற வகையில் கான் சரண்டைகிறோம் என்கிற உத்தரவை வழங்கினார். பெரும்பான்மை எதிர்த்தும் அவர் அரசியல் தலைவர்களை சுட்டிக்காட்டி முடிவை அறிவித்தார்.

போசை வண்டியில் ஏற்றி எங்கு செல்கிறோம் என தெரியாதிருந்தபோது போஸ் தன் கையில் இருந்த பேப்பரில் RIN Mutineers and Leaders Proceedings to unknown destination என்று எழுதப்பட்ட துண்டு காகிதங்களை போட்டுக்கொண்டே சென்றதாக சொல்கிறார். இதைக்கொண்டுதான் சில கம்யூனிஸ்ட்களுக்கு இச்செய்தி எடுத்துப்போகப்பட்டதாகவும் போஸ் சொல்கிறார்.

முலுந்த் கல்யாண் முகாமில் அடைக்கப்பட்ட வீரர்கள் கடுமையான நெருக்கடிகளுக்கு உள்ளாக்கப்பட்டனர். அங்கு பிரிட்டிஷ் காவலர்கள் கடுமையாக நடந்துகொண்டனர். போராளிகள் நீர் கூட அருந்த முடியாது என்ற போராட்டத்தை துவங்கினர். கேள்விப்பட்டு வந்த அதிகாரிகள் நிலைமைகளை மேம்படுத்த வாக்குறுதிகள் தந்தனர். காந்தியும் படேலும் வரவேண்டும் என்கிற போராளிகளின் கோரிக்கை ஏற்கப்படவில்லை.

காங்கிரஸ் தலைவர்கள் வீரர்களை கண்ணியமாக நடத்தவேண்டும் என பேசியிருக்கிறார்கள் என்ற செய்தி மட்டும் சொல்லப்பட்டது. நான்கு நாட்களில் உண்ணாநோன்பு முடிந்தது. அவர்கள் போராட்டம் குறித்து வெளிநாட்டு பத்திரிகைகள் எழுதியவை அவர்கள் பார்வைக்கு கொடுக்கப்பட்டது.

விசாரணைக்குப்பின் ஏப்ரல் 30ல் கொடுக்கப்பட்ட அறிவிப்பின்படி பம்பாயில் 313 ரேட்டிங்ஸ் பணியாளர்களில் 84 பேர் மூன்றுமாத சிறை, 60 பேர்கள் டிஸ்மிசல், 125பேர்கள் கப்பலுக்கு திரும்பலாம் என்றனர். கராச்சியில் ஜூன் 14ல் அறிவித்தபோது 65 பேருக்கு மூன்றுமாத சிறை என்றனர். அதேபோல் அதிகாரி F W கிங்கும் தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டார். அதை ஜூலை 17ல் அறிவித்தனர்.

விடுதலை அரசாங்கத்தில் நேரு, படேல் போன்றவர்களால் மட்டுமின்றி இந்திராகாந்தி அவர்களாலும் இந்த ரின் போராளிகள் ஐஎன் ஏ போன்றே விடுதலை வீரர்களாக கருதப்பட்டு பென்ஷன் ஏற்பாடு செய்வோம் என்றனர். ஆனால் பலர் சாகின்றவரை அப்படி ஒன்றை பெறாமல் போனதாகவும் போஸ் சொல்கிறார். மேற்கு வங்க முன்னாள் இராணுவத்தினர் அமைப்பு மட்டுமே தன்னை கௌரவித்ததாக போஸ் எழுதுகிறார்.

1981 இறுதியில் சோரன் நாக் எனும் பகதூர் கப்பல் போராளி முன்முயற்சியால் RIN Uprising Commemoration Committee அமைக்கப்பட்டு பிப்ரவரி 1982ல் அந்த எழுச்சி தொடர்பான செமினார் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது அதில் கணேஷ் கோஷ், பன்னாலால் தாஸ் குப்தா, சிசிர் போஸ் பங்கேற்றனர். 1983ல் கல்கத்தாவில் மீண்டும் கூடினர்.

போஸ் இப்புத்தகத்தில் எழுப்பிய கேள்விகளுள் ஒன்று- பலதலைவர்கள் எங்கள் போராட்டம்தான் இந்திய விடுதலையை துரிதப்படுத்தியது- பிரிட்டன் வெளியேற முக்கிய காரணியாக இருந்தது எனப் பேசி வருகின்றனர். ஆனால் how far the victimised ratings were benefitted by these utterances... we have seen many public meetings organised by different political parties to commemorate the RIN Mutiny day as Martyrs day, but the reasons for discontinuing it still are to be known.. அந்த வீரர் தாங்கள் ஏமாந்த உணர்வை இவ்வாறு

வெளிப்படுத்துவதைப் பார்க்கமுடிகிறது. போஸ் பதிவுகள் சோகச்சூழலை, ஏமாற்றத்தை சொல்கின்றன.

தனது போராட்டம் தொடர்ந்து கப்பல் அதிகாரிகளுடன் எப்படி நடந்தது, எவ்வாறு மோசமாக நடத்தப்பட்டதையும் போஸ் சொல்கிறார். தான் டிஸ்மிஸ் செய்யப்பட்டதை எதிர்த்து அவர் நடத்திய போராட்டப் பதிவுகளாக அவை உள்ளன. இவை விடுதலை இந்தியாவில் நடந்ததுள்ளன. தன்னை பணியில் சேர்த்துக்கொள்ளவேண்டும், கிராஜுடி கொடுக்கவேண்டும், பிரைஸ் மணி தரவேண்டும் என எல்லா வேண்டுகோளும் நிராகரிக்கப்படுவதை காணும்போது நம் மனம் சோர்ந்துபோகிறது.

பென்ஷன் கேட்டு எழுதியபோது அக்டோபர் 21, 1954ல் அவருக்கு It has been decided that Individuals who took part in the Indian navy Mutiny 1946 were Guilty of Flagrant Misconduct as there was no political background to it. It is regretted that no pensionary benefits can be granted in respct of the individuals concerned என்ற பதில் தரப்பட்டது. இதையெல்லாம் பார்த்துதான் அவர்களை மெச்ச பேசும் பேச்சுக்களால் ஏதும் எங்களுக்கு ஆகவில்லை என்பதை போஸ் பதிவிட்டிருக்கவேண்டும்.

14 ஜூன் 1965ல் போஸ் அவர்களுக்கு தரப்பட்ட பதில் இவ்வாறு இருந்தது. It is not known to this office whether any preferential treatment was given to the INA personnel but so far as the Navy personnel are concerned, the punishment of dismissal, was not revoked nor any monetary assisatnace given to them later on.

தன் கணக்கை முடித்தல் ‘pay account finalization’ என்பது குறித்து அவருக்கு 29-4-66ல் அதாவது அவரின் டிஸ்மிசலுக்கு பின்னர் 20 ஆண்டுகள் கழிந்த சூழலில் வந்த பதிலில் கணக்கில் ரூ 23 கடன் மட்டுமே உள்ளது. தாங்கள் தரவேண்டிய அந்தக்கடன் தள்ளுபடி செய்யப்பட்டது என்பதைத் தெரிவிக்கிறோம் என்றனர்.

ஆகஸ்ட் 17, 1968ல் வந்த கடிதம் அவருக்கு கிராஜூடி இல்லை என உறுதி செய்தது. அக்கடிதம் அவரின் டிஸ்மிசலை மட்டும் சொல்லாமல் சேவைக்காலம் 3 ஆண்டுகள்தான் இருந்தது . ஆனால் கிராஜுடிக்கு 5

ஆண்டுகள் தேவை என்ற விளக்கத்தை தந்தது. போஸ் மேலும் முயற்சித்தார். 1969ல் அதையே மீண்டும் சொன்னார்கள்.

விசாரணைக்குழு அமைக்கப்பட்டதைப் பற்றி பெர்சி பதிவிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. பாட்னா நீதிமன்ற தலைமை நீதிபதியாக இருந்த (பின்னாட்களில் அஸ்ஸாம் கவர்னர்) சையத் பாசல் அலி தலைமையில், வைஸ் அட்மிரல் பாட்டர்சன், மேஜர் ஜெனரல் ரீஸ் ஆகியோருடன் நீதிபதிகள் கே எஸ் கிருஷ்ணசாமி, மகாஜன் உறுப்பினர்களாக்கப்பட்டனர். விசாரணைக் கமிஷன் பாரபட்சமின்றி அமைக்கப்படவில்லை என்றும், சட்டப்படியானதேயில்லை என்றும் குரல்கள் அமைக்கப்பட்டபோது எழுந்தன.

ஜனவரி 20, 1947ல் அதன் முக்கிய findings என வெளிச் சொல்லப்பட்டதில் கீழ்கண்ட அம்சங்கள் இருந்தன.

1. கலகம் எழ அடிப்படைக் காரணமாக இருந்தவை குறைகள் நிவர்த்திக்கப்படாமல் இருந்த நிலைமைகள்தான். அரசியல் சூழல் போராட்டத்தை தீவிரப்படுத்த உதவின.
2. தாங்கள் வேறுபாட்டுடன் பாரபட்சமாக நடத்தப்படுகிறோம் என்பது முக்கிய காரணம். அதிகாரிகளுக்கும் ஊழியர்களுக்கும் தொடர்பு இடைவேளி இருந்தது காரணம். ராயல் நேவி பெற்ற சலுகைகளை இவர்களுக்கு வழங்காமல் புறக்கணித்தது காரணம்.
3. அடுத்த மிக முக்கிய காரணம் மோசமான தரமற்ற உணவு
4. திடீரென 'ரின்' விரிவுபடுத்தலை செய்ததால் பல குழப்பங்கள் அதிகமானது.
5. Flag Officer நிலைமைகளை சரியாக கவனிக்கத் தவறிவிட்டார். இருந்தாலும் இந்த கலவரத்தை நிறுத்தியிருக்கமுடியாது.
6. கிங் அதிகாரி ஏச்சுபேச்சுகள் அந்த நேரத்து நிகழ்வே தவிர அதுவே கலகத்திற்கு முழு காரணமல்ல.

கலகம் வெளியார் எவரும் தூண்டிவிட்டோ, முன்கூட்டியே திட்டமிட்டோ நடைபெறவில்லை. ஐ என் ஏ புகழ்பாடல் போன்ற அரசியல் செல்வாக்கு

இருந்தது. கம்யூனிஸ்ட் கட்சி தூண்டிவிட்டது என்ற குற்றச்சாட்டை விசாரணைக்கமிஷன் இந்த அறிவிப்பில் எங்கும் சொல்லவில்லை என்பதைக் காண்கிறோம். இந்த அறிக்கையை கமிஷன் ஏகமனதாக வந்தடைந்துள்ளது என்றும் அவர்கள் தெரிவித்தனர்.

1946 ஜூலையிலேயே 600 பக்க அறிக்கை கொடுக்கப்பட்டதாகவும் அதை வெளியிடாமல் வைத்திருந்தனர். கடுமையான விமர்சனங்கள் கண்டனங்களுக்குப் பின்னர் சாராம்சத்தை மட்டும் வெளியிட்டனர் என்ற குறைகளும் தெரிவிக்கப்படாமல் இல்லை.

விசாரணைக்குழுவின் முழு ஆவணத்தையும் போஸ் பெற எடுத்த முயற்சிகள் 1972ல் பலனளிக்கவில்லை. ஆய்வுலகிற்கு அவை இன்னும் திறந்துவிடப்படவில்லை என்ற பதிலே அவருக்கு கிடைத்தது. எழுச்சி ஏற்பட்டு ஓராண்டை எட்டிய தருணத்தில்தான் விசாரணைக் கமிஷன் முடிவுகள் ஓரளவிற்காவது வெளித்தெரியவந்தது.

மேஜர் ஜெனரல் V k சிங் புத்தகத்திலிருந்து அவரது ஆங்கில வரிகள் அப்படியே இங்கு தரப்பட்டுள்ளன.

In accordance with the rules, a Board of Inquiry was held by the naval authorities to enquire into the incidents on board every ship and shore establishment. In addition, the government constituted a Commission of Inquiry, which was chaired by Sir S. Fazl Ali, chief justice of the Patna High Court. The two judicial members were Justice K.S. Krishnaswami Iyengar, chief justice of Cochin State, and Justice Mehr Chand Mahajan, of the Lahore High Court. The two service members were Vice Admiral W.R. Patterson, flag officer commanding the cruiser squadron in East Indies Fleet, and Major General T.W. Rees, general officer commanding 4th Indian Division. The commission began its deliberations in April and submitted its report in July 1946.

Though politics was listed as one of the causes of the mutiny, it was not among the major ones. It is true that the mutineers did approach several politicians, but their response was lukewarm. The first person they contacted was Aruna Asaf Ali, who was requested by the ratings of the Talwar to be their spokesman and take up their cause with national leaders.

Not wishing to get involved in the strike, she advised them to remain calm and contact the "highest Congress authority in Bombay, Sardar Vallabh Bhai Patel." When contacted by Aruna, Patel replied that since the ratings did not take his advice before resorting to the strike, he saw no reason why he or she should interfere. Patel's views were supported by the Bombay Provincial Congress Committee whose President, S.K. Patil, advised the ratings "to observe perfect discipline in their conduct and maintain an atmosphere of non-violence in all circumstances."

காங்கிரஸ் தலைமையை expose செய்வது என்பது அவரின் இன்றுள்ள அரசியல் தேவைக்கு உகந்ததாக இருந்திருக்கலாம். ஆனால் அவர் படேலை அல்லவா expose செய்துள்ளார். காந்தி இதில் வெளிப்படையாக தனது ஏற்பின்மையை தெரிவித்து சென்றார் என சிங் ஏற்கிறார். அடுத்து வரும் செய்திகளில் கலகம் செய்தது போராடிய ரேட்டிங்ஸ்களை விடுதலை வீரர்கள் என அரசாங்கம் ஏற்கத்துவங்கியதென்கிறார். அதேபோல் 1973ல் குறைந்தபட்சம் 476 பேர்களுக்காவது விடுதலை வீரர்கள் பென்ஷன் தர நடவடிக்கை எடுக்கப்பட்டது என்ற ஆறுதல் செய்தியை சிங் தந்துள்ளார். சிங்கின் வரிகள் :

Recognising this contribution, the Government of India subsequently agreed to accord the ratings who participated in the mutiny the status of freedom fighters. In June 1973 the government approved the grant of freedom fighters' pension to 476 personnel who had lost their jobs, being dismissed or discharged from service because of their role in the mutiny.

தன்னெழுச்சியோ- அரசியல் விழிப்புணர்வுடன் எழுந்தார்களோ எது எப்படியாயினும் போராளிகள் பிரிட்டிஷ் அடக்குமுறை அவமானங்களுக்கு எதிராக எழுந்து நின்றார்கள். ஆயுதங்களுடன் வாழப் பயிற்சி எடுத்தவர்கள் என்ற வகையில் அதை அவர்கள் கையில் எடுத்தனர். வெற்றி பெறமுடியாமல் போயிருக்கலாம். 20 வயது இளைஞர்கள் ஆயிரக்கணக்கானவர் இந்த சுயமரியாதைப்போரில் தங்கள் வாழ்க்கையை முற்றிலுமாக தொலைத்தனர். போராடிய அவர்களின் பெருமிதத்தை அனைவரும் பகிர்ந்துகொண்டாலும் அவர்கள் சோகத்தை அவர்கள் மட்டுமே அனுபவிக்க நேர்ந்தது. எவராலும் அவர்கள் வாழ்க்கையை மீட்டுத்தரமுடியவில்லை. அவர்களில் பலர் எங்கோ

மறைந்தனர். ஊரில் ஏதாவது மரியாதை இருந்ததோ தெரியவில்லை.

தத், சிங், போஸ் என சில குரல்கள் மட்டும் தங்கள் நினைவுகளை உரக்கச் சொல்லி சென்றுள்ளனர். கான் குறித்து வேறு பதிவுகள் இருக்கலாம். வரலாறு அவர்களை பெருமிதமும் சோகமுமாக பல திசைக்கொண்டு பதிவிட்டுக்கொண்டுவிட்டது. தேடிப்போனால் அவர்கள் நம் நினைவுகளின் ஊடே நீந்திக்கொண்டிருப்பர்.

**போராட்டக்கால காட்சிகள் சில**



...



...

இந்துஸ்தான் கப்பல்

வீரர்கள் கைது

சாவும் எரியும் நெருப்பும்



...



...

SECOND DAK EDITION

# Hindusthan Standard

VOL. IX, NO. 142 CALCUTTA:—SATURDAY, FEBRUARY 23, 1946. FALGOON 11, 1352 B. S. PRICE TWO ANNAS

# INDIAN SAILORS IN REVOLT

The Bombay R. I. N. Ratings who struck work are seen parading the streets with Congress flags.

## SIX HOURS BATTLE WITH BRITISH TROOPS

### GRAVE TURN IN R. I. N. MEN'S STRIKE IN BOMBAY

### TWENTY SHIPS CAPTURED

*Govt. Rushing Strong Naval And Air Reinforcements*

"CEASE FIRE" ON BOTH SIDES AFTER CONCLUSION OF TRUCE

*BOMBAY, FEB. 21.—A kind of regular warfare has been in progress inside the Castle Barracks between the Indian naval ratings and British soldiers. Repeated loud reports of gunfire were heard every few minutes from the area. It is not yet known what kind of guns were used which produce such loud reports.*

*British troops have replaced Indian troops which were mounting guard yesterday.*

*Some of the Indian ratings who are inside the Castle Barracks according to a high naval officer, are still armed with firearms and they are returning the fire of the British soldiers. One British major and two Indian sepoys are reported to have been injured as a result of firing by the Indian naval ratings. According to another officer, the Indian ratings are in possession of large quantity of ammunition which may last a few days.*

*They secured this ammunition as a result of their raid on the armoury this morning.*

*A New Delhi message states that strong naval, military and air reinforcements are on their way to*

THE BATTLE ENDS

POLICE OPEN FIRE ON CROWDS

Trouble In Kalbadevi And Girguam Area

FIRING ON STRIKERS AT KARACHI

INDIANS RETALIATE WITH NAVAL GUNS

ONE KILLED AND 14 INJURED IN THE DUEL

*ULTIMATUM FOR WITHDRAWAL OF MILITARY*

SARDAR SARDUL SINGH

India Govt. Orders Release

*NEW DELHI, FEB. 21.—The Government of India have ordered the release of Sardar Sardul Singh Caveesher, who is in detention at Dharmsala.—A. P. I.*

BAN ON FORWARD BLOC AND C. S. P.

...



The Hindustan Times

.A. TRIAL OPENS IN RED FO

WOMEN WARRIORS SHAH NAWAZ DHILLON SAHGAL DEFENCE COUNS

OF GUN BATTLES IN BATAVIA

WARN ANNAMITES OF REPRISALS

BRITISH DOCK

CHARGES OF MURDER AND WAGING WAR AGAINST KING

DEFENCE ASKS FOR THREE WEEKS' ADJOURNMENT

NEW DELHI, Monday.—A trial unprecedented in British Indian history, whose significance was heightened by the fact

Syria A Potential F Spot In Mid-Fa

...



பி சி தத்

# ஆசிரியரின் பிற நூல்கள்



...

1. மார்க்சியத் தடங்கள்
2. ரோசாலக்ஸ்ம்பர்க்
3. போராளிகளின் குரல்
4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்
5. Trade Justice in Telecom
6. Selected Ideas of O.P Gupta
7. ஹெகல் துவங்கி..
8. கார்க்கியின் அரசியல்வெளி
9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்
10. காந்தியைக் கண்டுணர்தல்
11. நேருவின் மரபு
12. பெரியாரின் பொதுவுடைமை புரிதல்
13. அம்பேத்கரும் கம்யூனிசமும்
14. தோழர் காந்தி மகாத்மாவின் சோசலிச உரையாடல்

# சிறு வெளியீடுகள்

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா
2. சிகாகோ மேதின தியாகிகள்
3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்
4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்
5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்
6. நேதாஜி சுபாஷ் – கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்
7. காந்தியும் கம்யூனிசமும்
8. வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கர்
9. வரலாற்றில் சௌரி சௌரா ( நூற்றாண்டின் நினைவாக)

www.pattabiwrites.in

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை

“Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி- I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை- http://kaniyam.com/foundation

## கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

**கட்டற்ற மென்பொருட்கள்**

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஒஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்

-  கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
-  கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
-  மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
-  எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
-  தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
-  http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
-  தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
-  குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
-  http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
-  http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
-  தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
-  தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
-  எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
-  தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
-  தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

